

**அழகியான் தானே யரியுருவன் தானே**
**பழகியான் தாளே பணிமின் — குழவியாய்த்**
**தானே ழுலகுக்கும் தன்மைக்கும் தன்மையனே**
**மீனா யுயிரளிக்கும் வித்து**

*(நான்முகன் திருவந்தாதி — 72)*

*(தானே ஏழுலுகங்களுக்கு உபாதாந காரணமாய், ரூபம் ரஸம் கந்தம் முதலிய குணங்களுக்கும் ஆச்ரயபூதனாய், பிரளய காலத்தில் சிறு குழந்தையாய்க் கொண்டும், பின்பொருகால் மீன் உருவாய்க்கொண்டும், ஜீவர்களை ரக்ஷிக்கின்றவனான எம் பெருமான்தானே நரசிங்க உருக்கொண்டவன்; அழகுக்கு எல்லை நிலமாய் இருப்பவனும் அவன்தானே! புராண புருஷனாகிய அப்பெருமானுடைய திருவடிகளையே பணியுங்கள்)*




மே, 1987

தனிப்பிரதி ரு 1 — மலர் 17

வருடச் சந்தா ரூ. 12 — இதழ் 12


# உள்ளுறை



## அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் : பஞ்சமுக ஆஞ்சநேயர்—சித்திரம் : சசி.

2-வது, 3-வது : திருமலைக்கும் திருப்பதிக்கும் அண்மையில் இந்தியக் குடியரசுத் தலைவரின் வருகை புரிந்த போது.

பின்னட்டையில் : புதியதாகக் கட்டப்பட்ட ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கல்லூரி.


*சிறப்பாசிரியர்.*
திரு. சி.எச். வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*அச்சிடுபவர்*
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

*ஆசிரியர்:*
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்:*
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு
EDITOR,
" Sapthagiri "
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .



திரு. எஸ். லக்ஷ்மிநாராயணு

1932-ஆம் ஆண்டு முதல் திருமலைக் கோயில் மற்றும் திருப்பதியில் உள்ள சில கோயில்களும், தங்கு வசதிகள் பராமரிப்பும் தி. தி. தேவஸ்தானம் எனும் அமைப்பின்-நிருவாகத்தின் கீழ் வந்தன. அது முதற் கொண்டு தி. தி. தேவஸ்தானம் பலவாறு வளர்ச்சி அடைந்துள்ளது. திருமலைக்கு வரும் யாத்திரிகர்களின் வசதிகளை மனதிற் கொண்டும், திருமலை மற்றும் சில கோயில்களின் மேம்பாட்டினைக் கருத்திற் கொண்டும் பல ஆக்கப் பூர்வமான திட்டங்கள் மேற் கொள்ளப்பட்டு நிறைவேற்றப்பட்டுள்ளன. இவ்வளர்ச்சிக்கு அன்று வித்திட்டவர் அன்றையச் செயலாட்சித் தலைவரான திரு. சி. அண்ணுராவ் அவர்கள். அன்னுரைத் தொடர்ந்து செயலாட்சித் தலைவர் எனும் பதவியின்கீழ் தி.தி.தேவஸ்தானத்தில்,ஆஸ்திக உலகம் வியக்கும் அளவு—உலக மக்களை ஈர்க்கும் வகையில் பல வளர்ச்சித் திட்டங்கள் நடைபெறத் தொடங்கின. இத்திட்டங்கள் வெற்றி பெற அவ்வவ் செயலாட்சித்தலைவர்கள் பெரிதும் காரணமாக விளங்கினர்.



திரு. சிஎச். வெங்கடபதிராஜு

இவ்வகையில் தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவராக பணிபுரிந்து அண்மையில் இப்பதவியிலிருந்து சென்ற திரு. எஸ். லக்ஷ்மிநாராயணு ஐ.ஏ.எஸ். அவர்களின் பதவிக் காலத்தில் பல உன்னதமான திட்டங்கள் பூர்த்தி செய்யப்பட்டன. பல திட்டங்கள் தீட்டப்பட்டு முடிக்கப்பட்டன. இன்னும் சில புகுத்தப்பட்டன. இறைவனைத் தரிசிக்க வரிசையில் வரும் யாத்திரிகப் பொது மக்களின் உள்ளங்களில், மிகவும் தேவையான அமைதியினையும், ஆன்மீக உணர்வினையும் ஏற்படுத்தும் வகையில் பல வசதிகளைக் கொண்ட 'வைகுண்ட' க்யூ கட்டிடத் தொகுதி கட்டி முடிக்கப்பட்டதும், தலை முடி காணிக்கைச் செலுத்தும் வகையில் நவீன வசதிகளைக் கொண்ட 'கல்யாண கட்டா' கட்டிடம் கட்டி முடிக்கப்பட்டதும், மூவுலகிலேயே சிறந்தாகக் கருதப்படும், நாளும் திருமலையில் பத்தாயிரம் பக்தர்களுக்கு இலவசமாக உணவிடும் வகையில், 'அன்னதான திட்டம்' செயல்படுத்தப்பட்டதும், முன்வினைப் பயனுகவோ, அல்லது செய்வினை விளைவாகவோ உடல் ஊனமுற்றோர்க்குப் புத்துயிர் அளித்திடும் வகையில் அவர்களுக்கென திருப்பதியில் "பாலாஜி மருத்துவ மனை" ஒன்றினை ஏற்படுத்தியதும், பொது மக்கள் பயனுறும் வகையில் திருப்பதி-திருச்சானூர் சாலையில் திருமண மண்டபங்கள் எழுப்பப்பட்டதும், திருமலையில் நவீன வசதிகளுடன் கூடிய தங்கு வசதி குடில்கள் அதிகமாக்கப்பட்டதும் அன்னுருடைய பதவிக் காலத்தில் செயல்படுத்தப்பட்ட ஆக்கப் பூர்வமான திட்டங்களாகும். திருமலை மற்றும் திருப்பதிக்கு வரும் யாத்திரிகர்களின் மற்றும் உள்ளூர் மக்களின் தாகத்தினைத் தீர்த்திடும் வகையில் குமாரதார நீர்த்தேக்கத் திட்டத்தினைத் துவக்கியது அவரை என்றென்றும் நினைவிற் கொள்ளச் செய்யும். எல்லாவற்றிற்கும் முடி மணியாக அவருடைய சாதனைகளில் திகழ்வது, யாத்திரிகர்களின் சிந்தனைக்கு மட்டுமன்றி, கண்களுக்கும் பக்தி விருந்து ஒன்றினை அளித்திடும் வகையில் அவ்வேங்கடவனின் திருமுடிமீது ஒளிரும் 'வைரத் திருமுடி' திருப்பணியாகும். அழகுக்கு அழகு செய்யும் அத் திருமுடி திரு. லக்ஷ்மிநாராயணு அவர்களின் ஆன்மீகத் தாகத்தினை நன்கு படம் பிடித்துக் காட்டும். 'ஸப்தகிரி' பத்திரிகையின் சிறப்பாசிரியராகவும் இருந்த அவருடைய ஆதரவும், அன்பும் தொடர்ந்து நம் பத்திரிகைக்குக் கிடைக்கவும், தன் திருப்பணிகளின் மூலம் தேவஸ்தான வரலாற்றில் தனக்கென ஓர் இடத்தைக் கொண்டவருமான அன்னுருக்கும் அவர் குடும்பத்தாருக்கும் நலம் பல விளையவும் அவ்நெடியோனின் திருவருள் என்றென்றும் கிடைப்பதாகுக.

அவரைத் தொடர்ந்து தற்போது அப்பதவிக்குப் புதியதாகப் பொறுப்பேற்றுக் கொண்ட திரு. சிஎச். வெங்கடபதி ராஜு ஐ.ஏ.எஸ். அவர்கள் அரசு துறைகள் பலவற்றில், பல நிலைகளில் பணிபுரிந்த சிறந்த நிருவாகியும், தேர்ந்த அனுபவஸ்தருமாவார்.குறைவான பேச்சு,விரைவான செயல் திறமை,எண்ணத்தில் உறுதி,தோற்றத்தில் எளிமை ஆகியன அவருடைய பலமாகும். இவையாவும் தி. தி. தேவஸ்தான வளர்ச்சியில் பெரும் பங்கு வகிக்கும் என்றே உறுதியாக நம்பலாம். அன்னுரை சிறப்பு ஆசிரியராகவும் 'ஸப்தகிரி' பெற்று இருப்பதால், பத்திரிகை மேலும் ஓர் ஆரோக்யமான பாதையில் நடைபோடும் என்றும், அதற்கு அவருடைய முழு ஆதரவு பத்திரிகைக்குக் கிடைக்கும் என்றும் உறுதியுடன் நம்புவோம். அதற்குப் பத்திரிகையும் தன் முழு ஒத்துழைப்பினையும் வழங்கும் என்று கூறிக் கொண்டு அன்னுரின் செயற்திட்டங்கள் எல்லா வகைகளிலும் வெற்றி பெற அவ்வேங்கடவனின் திருவருள் என்றென்றும் கிடைப்பதாகுக.

# அனுமன் காட்டும் வாழ்வியல் நெறிகள்

இராமாயண இறுதிக்காண்டங்களாகிய ஆரணிய, சுந்தர, யுத்த காண்டம் மூன்றிலும் அனுமன் வாழ்வும், அவன் பின்பற்றிய வாழ்க்கை நெறியும் நன்கு விளக்கம் பெற்றுள்ளன. சுந்தர காண்டத்தில் 'கவிக்கு நாயகன்' என்று குறிக்கப்பெறும் அனுமன், கம்பன் கவிதைக்கும் நாயகனாக இலங்கக் காணலாம். அங்கெல்லாம் அனுமன் சொல்லாலும் செயலாலும் சிந்தையாலும் சிறப்பாக வாழ்ந்து நமக்கெல்லாம் வழி காட்டுகின்றனன்.

சபரியின் அறிவுரைக்கேற்பக் கிட்கிந்தை நோக்கி வருகின்ற இராம இலக்குவரைக் கண்டு, "வாலியின் கையாட்களோ, இவர்" என அஞ்சிய சுக்கிரீவன் உண்மை அறிந்துவர அனுமனை அனுப்புகிறான். அந்தண வடிவில் அனுமன் சென்று, அவர்களைக் கண்டு, அறவோர் எனத் தெளிந்து வரவேற்று அளவளாவுகின்றான். இறுதியில் சுக்கிரீவன் பணித்தவாறு அவர் இன்னார் என அறிந்து சுக்கிரீவனுக்கு உரைக்க வேண்டிய நிலையை உணர்கிறான். 'அவர்களோ மிகப் பெரியர்; தருமத்தின் வடிவினர்; அவர் பாதம் படுகின்ற இடங்களிலெல்லாம் கற்களும் கள்கசியும் மலர்களாகக் குழைகின்றன; செல்கின்ற இடங்களிலெல்லாம் மரங்களும் செடிகளும் தாழ்ந்து தொழுகின்றன. இவர்கள் இன்னார் என அவர்கள் வாயிலாகவே கேட்டறிந்து சுக்கிரீவனுக்கு உரைக்க வேண்டிய தன் நிலையை எண்ணுகிறான், அனுமன். அவ்வளவு பெரியவர்களை எப்படிக் கேட்பது! பல நிலை உள. 'நீ யார் என்று கேட்கலாம்' 'நீங்கள் யார்' என்று பன்மையிலும் கேட்கலாம். 'தங்கள் பெயர்


திரு. டாக்டர். சௌரிராஜன்,
*திருப்பதி.*


என்ன' என்று மரியாதையாகவும் கேட்கலாம். 'தங்கள் பெயர் இன்னதென யான் அறிந்துகொள்ளலாமோ?' என்று பணிவோடும் கேட்கலாம். இதுதான் வழக்கில் உள்ள நெறிகள். இவ்வாறு கேட்டறியும் நிலைகளுள் இன்னும் மேலான நிலை ஒன்றை-சீரிய வாழ்க்கை நெறி ஒன்றை — அனுமன் சொல்வழி நம்மால் அறிய இயல்கிறது. அது இதுதான். 'என் தலைவனாகிய சுக்கிரீவனுக்குத் தங்களை யாரென்று சொல்லுவேன் பணித்தருள்க' என்ற மிக அடக்கத்தோடும் அன்போடும் அறிவோடும், கடமை உணர்வோடும் கேட்கிறான்.

"யார்என விளம்புகேன் நான்எம்குலத்
தலைவற்கும்மை?
வீர! நீர் பணித்திர்!........."

(அனுமன் படலம், பா-25)



பஞ்சமுக ஹனுமார் வாகனத்தில் ஸ்ரீ ராஜகோபாலசுவாமி - மன்னார்குடி.
—சன்மிஷ்டை.

என் அனுமன் கேட்கும் நெறி புதியது மட்டுமன்றிப் புனிதமானதும் ஆகும்.

சொல்லும் நெறியுள் சுருங்கச் சொல்லும் திறன் அனுமன் தன் வாக்கில் — வாழ்வில் பல இடங்களில் அமைந்து விளங்கக் காணலாம். பிணிவீட்டுப் படலத்தில் இந்திரசித்தன் அனுமனை இழுத்துச் சென்று இராவணன் முன் நிறுத்துகின்றான். சீற்றத்தோடு நோக்கிய இராவணன், 'நீ யார்? திருமாலா? இந்திரனா? சிவபிரானா? பிரம தேவனா? ஆதி சேடனா? கருநிறக்காலனா? முருகனா? அந்தணர் வேள்வியில் தோன்றிய பூதமா? உன்னை விடுத்தவர் யார்?' என்று பலவாறு தொண்ணூற்று மூன்று சொற்களால் வினவிய இராவணனுக்குச் 'சொல்லிய அனைவரும் அல்லன்' (பிணி வீட்டுப்படலம், பா. 89) எனச் சுருக்கமாகவும் தெளிவாகவும் அனுமன் மூன்றே சொற்களில் சொல்லிய நெறி போற்றத்தக்கது.

சொல்லின் பயன் தன் உளங்கொண்ட ஒன்றைப் பிறர் உளம் கொள்ளுமாறு கூறுதலே ஆகும். அவ்வாறு கூறும்போது தன் உளங்கொண்டதையெல்லாம் கூற வேண்டுவதில்லை. பிறர் உளம் எவற்றைக் கொள்ள வேண்டுமோ அவற்றை மட்டும் கூறினால் போதும். அவற்றைக்கூடக் கொள்வோர் எதிர்ப்பார்ப்புக்கு ஏற்ப முறைப்படுத்திச் சுருங்கச் சொல்லுதல் நன்னெறியாகும். இந்நெறியில் அனுமனுக்கு ஈடாக் யாரையும் ஒப்பிட்டுரைக்க இயலவில்லை. 'திருவடி தொழுத படலத்தில்' தென்திசை நீங்க, பிற திசைகளில் சென்ற வானர வீரர்கள் சீதையைக் காணாது வறிதே திரும்பினர். தென்திசையில் சென்றவர்பால் செய்தி ஒன்றும் வாராமை கண்டு இராமபிரான் கலங்குகின்றான். காலம் கடந்து விட்டதே, தென்திசை சென்றவர்கள் மாண்டு மறைந்து விட்டனரோ? அல்லது சீதைதான் மாண்டனளோ? இத்துயரச் செய்தியைத்தாங்கி வருவதை விடச் சாதலே மேல் என இறந்து போனார்களோ? என்றெல்லாம் சுக்கிரீவன்பால் கூறி இராமன் கலங்கிக்கொண்டிருக்கின்றான். அவன் நெஞ்ச நிலையை உணர்ந்து அதற்கு ஏற்பப் படிப்படியாக முறைப்படுத்திப் பின்வருமாறு செய்திகளைச் சொல்லுகின்றான். 'இருக்கிறாள்' 'இல்லை' என அனுமன் ஏது சொல்லப் போகிறானோ என்று ஊசலாடித் தவிக்கிறது இராமனுடைய நெஞ்சம். எனவே, அவள் உயிரோடு இருக்கின்ற இருப்பை முதலில் உணர்த்த வேண்டும். அடுத்து, "இந்தச் செய்தி பிறர்பால் கேட்டு வந்த செய்தியா! அல்லது தானே கண்டு வந்த உண்மையா?' என்ற ஐயம் இராமன் நெஞ்சில் எழலாம். மூன்றாவதாகக் கொடிய அரக்கர்களுக்கு இடையே அவள்கற்பு காக்கப்பட்டதா? என்ற தடுமாற்றம் இராமனுக்கு மட்டும்மல்ல, இராமனைச் சுற்றி உள்ளோருக்கும் தோன்றக்கூடும். இறுதியில் இவற்றிற்

## உன்னத புகழ்பாடும் உடையவர் திருமேனிகள்

ஸ்ரீராமானுஜர் (ஸ்ரீ உடையவர்) கர்நாடக மாநிலம் திருநாராயணபுரத்தில் திருநாராயணப் பெருமாள் கோவில் ஸ்தாபித்து அதன் நிருவாகம் சீராகவும் நிரந்தரமாகவும் செயல்படத் திட்டங்களை செம்மையாக வகுத்து முடித்துவிட்டு (பிறகு) ஸ்ரீரங்கம் திரும்புவதற்கு முற்பட்டார். இச்செய்தி அறிந்து ஊர் மக்கள் ஸ்ரீ உடையவரின் பிரிவை எண்ணிக் கண்ணீர் விட்டுக் கதறி அழுதார்கள். ஸ்ரீ உடையவரை தங்கள் ஊரில் என்றும் கண்டு சேவிக்கும்படியாக ஸ்ரீ உடையவரின் திருமேனி வடிவை செப்பு விக்ரகமாக வடித்து வழங்கும்படி வேண்டினார்கள். ஸ்ரீ உடையவர் அவ்விதமே தம்மைப் போல ஒரு பஞ்சலோக விக்ரகத்தை சிற்பியைக் கொண்டு செய்தருளி அவ்வூர் கோயிலில் எழுந்தருளச் செய்தார். மக்களும் மனமார அவ்விக்ரகத்தை உகந்து ஏற்றுக்கொண்டு ஸ்ரீ உடையவர் ஸ்ரீரங்கம் புறப்பட விடை கொடுத்து வணங்கி நின்றார்கள். இத்திருமேனி 'தமருகந்த திருமேனி' என வழங்கி வருகிறது.

ஸ்ரீ உடையவர் ஸ்ரீரங்கத்தில் நிரந்தர வாசம் செய்ய திருவுள்ளம் கொண்டுள்ளார் என்பதை அறிந்து அவருடைய அவதாரத் தலமான ஸ்ரீ பெரும்பூதூர் மக்கள் ஸ்ரீ உடையவரை அணுகி அடிபணிந்து "எங்களுக்கு ஸ்ரீ பெரும்பூதூரில் என்றும் சேவை சாதித்தருள ஏதுவாய் தேவரீருடைய அர்ச்சா விக்ரகத்தை அளித்து அருள வேண்டும்" என்று வேண்டினார்கள். ஸ்ரீ உடையவர் மனம் இசைந்து பஞ்சலோக அர்ச்சாவதார விக்ரகம் ஒன்றினைத் சில்பியின் மூலம் வடிவமைத்துத் தமது மகிமைகள் அதில் மலரும்படி மார்புறத் தழுவி உகந்தருளினார். அவ்வூர் ஆலயத்தில் எழுந்தருளியுள்ள அத்திருமேனியை 'தாமுகந்த திருமேனி' என வழங்குகிறார்கள்.

ஸ்ரீரங்கம் மகாக்ஷேத்ரத்தில் ஸ்ரீ உடையவர் கி. பி. 1138ம் ஆண்டில் பரமபதம் பூண்டார். அவருடைய திவ்ய திருமேனி ஸ்ரீ அரங்கன் ஆணையின்படி அவனுக்கருகில் ஆலயத்தில் ஒரு பாதுகாப்பான இடத்தில் பள்ளிப்படுத்தினார்கள். நாம் இன்று கண்டு தொழும் அத் திருமேனி 'தானான திருமேனி' என வழங்கி வருகிறது.

ஸ்ரீ உடையவரின் அருளைப் பெற்று உய்வு பெற ஸ்ரீ வைஷ்ணவ பெருமக்களுக்கு எத்தனை வாய்ப்புகள்!

**ஆர். சுப்பராவ் — திருக்கோவலூர்.**

## திருமலையில்
## தி. தி. தேவஸ்தான
# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| காட்டேஜ் விவரம் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| டி. பி. சி. | ரூ. 25/- ரூ. 15/- ரூ. 10/- |
| டி.பி.சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | ரூ. 20/- |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதி பெரியன | ரூ. 40/- |
| ,, ,, சிறியன | ரூ. 20/- |
| ஹில் வ்யூகாட் டேஜ் | ரூ. 10/- |
| சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 20/- |
| சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| அஞ்சனாத்ரி காட்டேஜ் | ரூ. 20/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| திருமணக்கூடம் (3-வது சத்திரம்) | ரூ. 15/- |
| சிறப்பமைப்பு கொண்ட காட்டேஜ்கள் | ரூ. 75/- |
| டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | ரூ. 50/- |

**எஸ். வி. விருந்தினர் விடுதி**

| | |
|---|---|
| பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| மோடி பவன் | ரூ. 100/- |

**திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)**

| | |
|---|---|
| பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| ரூயா காட்டேஜ் எண். 248 | ரூ. 80/- |
| கோகினேனி காட்டேஜ் எண். 226 | ரூ. 80/- |
| சி. சி. காட்டேஜ் எண். 237 | ரூ. 100/- |
| எஸ். எம். சி. கிழக்கு எண். 272 | ரூ. 50/- |
| ஏ. டி. சி. எண். 99 | ரூ. 80/- |
| டி. பி. (உள்பக்க காட்டேஜ்) | ரூ. 50/- |
| டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| டி. பி. காட்டேஜ் (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| ஏ. டி. சி. மற்றும் டி.பி.சி. ஒரு அறைத்தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 12/- |
| ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

கெல்லாம் சாட்சி யார் என்றுசான்று காட்டி உறுதிப்படுத்தவும் வேண்டும். இவ்வாறு அனுமன் இராமன் முன் தான் கூற வேண்டியவற்றை முறைப் படுத்திக் கூறுகின்றான்.

"கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்"

(திருவடிதொழுத படலம் - 52)

என்று, மேற்கூறிய அடியில் அமைந்த நான்கு சொற்களையும் 'கண்டனன்; அணியைக் கண்டனன்; கற்பினுக்கணி யைக் கண்டனன்; கண்களால் கண்ட னன்' என நான்கு படிநிலைகளில் வைத்து இதன்கண் அமைந்துள்ள நயம் பலவற்றைச் சான்றோர் விளக் குவர்.

சொல்வழி போலவே செயல் வழி யாலும் அனுமன் காட்டும் வாழ்க்கை நெறிகள் பல. செயலில் விரைவு வேண்டும். கதிரவன் மறைகின்ற வரை பவள மலையில் தங்கியிருந்த அனுமனுக்கு இலங்கைசென்று சீதாப் பிராட்டியாரைத் தேடிக்காண ஓர் இரவே வாய்க்கிறது. அந்த ஓரிரவில் மதிலைக் கடந்து பல்வேறு மண்டபங் களை ஆய்ந்து கடந்து பல்வேறு மக் களை மறைந்து நின்று தெளிந்து இராவணினின் சுற்றத்தார் இல் லங்களையெல்லாம் தேர்ந்து இராவணனின் அந்தப்புர அறை களையெல்லாம் அணுகிச் சீதை யைக் காணவேண்டிய நெருக்கடி அனுமனுக்கு ஏற்பட்டுள்ளது. அவன் இல்லந்தொறும் பெண்கள் உறை கின்ற இடந்தொறும் சென்று சீதையைத் தேடுகின்றான். தேடுத லில் விரைவும் வேண்டும்; வினய மும் வேண்டும். மலரினை நாடிச் செல்லும் வண்டுகளிடத்து இவ்விரு திறன்களும் ஒரு சேர அமைந்திருக் கக் காணலாம். தேன் தேடும் வண்டு சில மலர்களுக்குள் சென்று தேனுண்டு மீளும். முன்னரேயே வண்டு சென்று உண்ட மலராயின் அவற்றை எட்டிப் பார்த்து உட்செல்லாது வந்து விடும். இத்தகு விரைவும் வினயமும் அனுமன்பால் இருந்ததை,

" பூத்தொறும் வாவிச் செல்லும்
பொறிவரி வண்டின் போனுன்"
(ஊர்தேடு படலம், பா - 101)

என்னும் கம்பன் தொடரால் உணர முடிகின்றது.

எண்ணிய செயலுக்கு இடையூருக உறவு, பகை முதலிய தடை பல தோன்றல் இயல்பு. இவற்றையெல்லாம் கடந்து வெற்றி பெறவே செயல் வீரனின் சிறப்பாகும். கடல் தாவு படலத்தில் அனுமனுக்கு மூவகைத் தடைகள் ஒரு சேர வாய்க்கின்றன. இவை முன்றையும் தன் அன்பாலும் ஆற்றலாலும் அறிவாலும் கடந்து இலங்கையை அடைதலாகிய செயலில் அனுமன் வெற்றி பெறுகின்ருன். அன்பு கொண்டு, உறவு பாராட்டி உணவு உண்ணுமாறு வேண்டிய மைநாக மலையை நோக்கி, 'இராமனுக்குப் பூண்ட இப்பணி இன்பமானது; என் எண்ணம் நிறைவேறும் வரை ஏதும் உண்ணேன்; உறங்கேன். இவை போதுமன்ருே?"

" வருந்தேன் அதுஎன்துணே வானவன்
வைத்த காதல்
அருந்தேன் இனியாதும் என்ஆசை
நிரப்பி அல்லால்
பெருந்தேன் பிழிகாலும் நின்அன்பு
பிணித்த போதே
இருந்தேன் நுகர்ந்தேன் இதன்மேல்
இனிஈவது என்னே? "
(கடல்தாவு படலம்-பா - 60)

'அகலாது அணுகாது தீக்காய்வார் போலத் தலைவனைச் சார்ந்து அவன் அன்புக்குரியராக இருப்போரே நீடித்து அவனேடு இருத்தல் இயலும். மகிழ்ச்சிப் பெருக்கில், வெற்றிப் பெருமிதத்தில் அடியான் ஒருவனைத் தனக்கு ஒப்பானவனுகக் கொண்டு தலைவன் உவந்தாலும் அடியவன் தன்னிலையில் மாருது மிகவிழிப்பாகச் செயல்படுதல் வேண்டும். அடக்கமும் விழிப்புணர்ச்சியும் இன்றேல் பொருமைக்கும் பூசலுக்கும் ஆளாகித் தொல்லையுற நேரும். இந்த வாழ்வியல் நெறி, விடை கொடுத்த

# பரம ரகஸ்யம்

மலரில் வீசும் மணமும், தேனில் ருசிக்கும் இனிப்பும், யாழினில் ஒலிக்கும் இன்னிசையும், குழந்தையின் மழலையும், பூர்ண சந்திரனின் ஒளியும், குதித்து ஓடும் நதியின் குளிர்ச்சியும் ஸ்ரீராதாதேவியின் பிரஸாதமே! இயற்கையில் உள்ள இன்பமெல்லாம் ஸ்ரீராதையின் அம்சமே! அன்பின் வடிவம் கண்ணன். இன்பத்தின் வடிவம் ராதை. ரஸிக பக்தர்களின் லக்ஷ்யம் இந்த ராதாகிருஷ்ண யுகளம்.

யோகத்தாலோ, தியாகத்தாலோ, மந்திரத்தாலோ, தந்திரத்தினுலோ இந்த யுகள தத்துவம் புரிந்து விடாது. லௌகிக வைதிக வியவகாரங்களை விட்டுத் தனிப் பெரும் மனே ராஜ்யத்தில் ஆழ்ந்து, சரச கவிதை என்னும் ஆற்றங்கரையில் ப்ரேமை என்னும் நிகுஞ்சத்தில் அமர்ந்து, பக்தியெனும் மதம் பிடித்து இன்ப வெள்ளத்தில் மிதந்து கொண்டிருக்கும் ஹிதஹரி வம்சரைப் போன்ற கோபி ரத்னங்களும் சிறிதே புரியும் ரகசியம் இது!

— ஸ்ரீ கிருஷ்ணப்ரேமி சுவாமிகள்.

தகவல் : ஆர். சுப்பாராவ்.

படலத்தில் அனுமன் வழியே நன்கு விளங்கக் காணலாம். தன் வாழ்வில் தனக்கு உதவிய அனைவருக்கும் எண்ணற்றப் பரிசு பொருட்களை முடிசூடிய பின் இராமன் வழங்குகின்ருன். எத்தனையோ சூழல்களில் எவ்வளவோ இன்னல்களில் பலவாறு பலபோது உயிர் தந்து உதவிய அனுமனுக்கு எதைக் கொடுத்து ஈடு செய்ய இயலும் என்று ஏங்கிய இராமபிரான் தன்னையே அனுமனுக்கு அளிக்க நினைந்து, 'என்னை இறுகத் தழுவிக் கொள்' என அழைக்கின்ருன். அந்த நிலையிலும் தன்னிலையில் தடுமாருமல் அனுமன் வணங்கி, வாய் புதைத்து, கைகூப்பி இராமன்தன் அன்புக்கு நன்றி கூறும் தோற்றத்தில் நிற்கின்ருன். இச்செயல் அனுமன் செயல்களிலெல்லாம் விஞ்சிய ஒன்ருகும். இவ்வாறு கம்பன் காவியத்தில் இடம் பெற்ற பக்த அனுமனின் தோற்றமே ஓவியமாகவும் சிற்பமாகவும் இன்று எங்கும் விளங்கி நிற்கக் காண்கின்ருேம். இத்தகு சீரிய வாழ்க்கைச் செயல் நெறியை அனுமன் வாழ்வில் வைத்துக் கல்வியிற் சிறந்த கம்பர் கீழ்வருமாறு காட்டுகின்ருர்.

" மாருதி தன்னை ஐயன் மகிழ்ந்து
இனிது அருளின் நோக்கி
ஆர் உதவிடுதற்கு ஒத்தார் நீ
அன்பால்? அன்று செய்த
பேர் உதவிக்கு யான்செய் செயல்
பிறிது இல்லை பைம்பூண்
போர்உதவிய திண்தோளாய்
பொருந்துறப் புல்லுக என்ருன் "
(விடை கொடுத்த படலம் - 20)

" என்றுலும் வணங்கி நாணி
வாய்புதைத்து இலங்குதானை
முன்தலை ஒதுக்கி நின்ற மொய்ம்பன்"
(விடைகொடுத்த படலம் - 21)

சொல்நயத்தால், செயல்திறத்தால் நமக்கெல்லாம் வழிகாட்டியாய் அமைந்து விளங்கும் அனுமன் சிறியன சிந்தியாச் செம்மலாய் விளங்குகின்ருன். எச்செயலுக்கும் இறை நினைவு நலம் செய்வதாகும். இறைவன் ஒருவனை நம்பிச் செயலில் ஈடுபடுங்கால் 'நான்' எனும் முனைப்பு மறைதலால் விருப்பு வெறுப்பின்றித் தெளிந்த அறிவுத்திறத்தோடு செயல் நன்கு அமையும். அன்றியும் செயலால் எழும் வெற்றிச் செருக்கின்றி

அடக்கமும் அமைதியும் நிலவும். இத்தகு இறைநினைவு செயலின் துவக்கத்திலும் இறுதியிலும் இடையிலும் எப்பொழுதும் அனுமன் நெஞ்சில் நிலவக் காணலாம்.

'கடலைக் கடக்க வல்லார் யார்?'' என நீலன், அங்கதன், சாம்பன் முதலியோர் சிந்தித்து, 'அனுமனே வலியன்' என முடிவு செய்யும்போது அந்த முடிவை எத்தகு செருக்கும் இன்றி 'இறையருளால் இயலும்'என ஏற்றுக்கொள்ளும் அனுமனின் சிந்தையில் இராமன் குடி கொண்டுள்ளதைக் காணலாம். ''நண்பர்களே! உங்கள் அருளையும் இராமபிரான் ஆணையையும் இரு சிறகுகளாகக் கொண்டு கருடாழ்வான் போலக் கடலைக் கடப்பேன்!'' என்னும் பொருள் புதைய,

''இற்றை நும்அருளும் எம்கோன்
ஏவலும் இரண்டு பாலும்
கற்றை வார்சிறைகள் ஆக
கலுழனின் கடப்பல் காண்டீர்''
(மயேந்திரப் படலம்-24.)

என்பான். இதே நினைவு, செயலின் வெற்றியாகப் பல இடையூறுகளைக் கடந்து அவன் இலங்கையை அடைந்தபோதும் அவன் நெஞ்சில் நிலவுவதைக் காணலாம். 'இராம' என்ற நினைவால் எத்தகைய இடையூறும் நீங்கி வெற்றி விளையும் என்று எண்ணுகிறான்.

''ஊறுகடிது உறுவன உறுகில் அறம் உன்ன
தேறல்இல் அரக்கர் புரிதீமை அவை தீர
ஏறும்வகை எங்குஉளது 'இராம!' எனஎல்லாம்
மாறும்அதின் மாறுபிறிது இல்என வலித்தான்''
(கடல்தாவு படலம்—88)

கண்ணும் கருத்துமாய் இருத்தல் என்று அடிக்கடிக் கூறக் கேட்கிறோம். கண் ஒரு பொருளைக் காண்கின்றது. காணப்படுகின்ற சூழல் காண்போனது உள்ளத்தின் நிலைக்கேற்பக் காணப்படும் பொருளின் தன்மை அமைகின்றது. எனவே, காண்கின்ற கண்ணை மட்டும் கருவியாகக் கொள்ளின் உண்மை தோன்றாமல் போகலாம். உள்ளம் உணர்ச்சி வயப்பட்டிருந்தாலும் உண்மை தெரியாமல் போகும். எனவே பொறி புலன்களால் பெறுகின்ற காட்சியைக் கருத்தோடு ஆய்ந்து, சிந்தை தெளிதல் வேண்டும். இத்தகு திறன் அனுமனுக்கு அமைந்திருந்தது.

மயன் மகளாகிய மண்டோதரியின் தெய்வீக அழகைக் கண்ட அனுமன் கண்கள் 'அவள் சீதையோ' என ஐயுறுகின்றன. எனினும் அமைதியாகச் சிந்தித்து இவள் அவளல்லள் எனத் தெளிகின்றான்.

'' கண்டு கண்ணொடும் கருத்தொடும்
கடாவினன் ''
(ஊர்தேடு படலம், பா-196)

'' இலக்கணங்களும், சிலஉள,
என்னினும்
எல்லை சென்றுறு க்கில்லா
அலக்கணெய் வதுவது அணியதுண்டு
டென்டெடுத்
துறைகு வதிவள் யாக்கை
மலர்க் கருங்குழல் சோர்ந்துவாய்
வெரீஇ சில
மாற்றங் கள்பறை கின்றாள்
உலக்குமி ங்குஇவள் கணவனும்
அழிவுமிவ்
வியன் நகர்க் குளது என்றான் ''
(ஊர்தேடு படலம்—202)

சிந்தையின் கேடுகளுக்கெல்லாம் அடிப்படைக் காரணம் காம உணர்வே ஆகும். அழுக்காறு, வெகுளி, இன்னாச்சொல் இவற்றிற்கெல்லாம் அடிப்படை அவாவே காரணம். காம, குரோத, மத, மாச்சர்ய முதலிய அறுவகைப்பகைகளில் அடிப்படையானதும் தலையாயதும் காமமே ஆகும்; காமமே அறிவு மயக்கத்திற்கும் காரணமாகிறது. அனுமன் சிந்தை காமம் கடந்ததாகும். ஊர்தேடு படலத்தில் சீதையை நாடிச் செல்கின்றான். தேடிச் செல்கின்ற சீதையோ ஒரு பெண். எனவே, பெண்கள் இருக்குமிடங்களை நாடிச் செல்வது அவன் கடமையாகி விடுகின்றது. அரக்க மகளிரோ கள்ளுண்டு காமக் களிப்புண்டு கண்டபடி இன்பந்துய்த்துத் தூங்கியும், பிரிவால் ஏங்கியும் கிடக்கின்றனர். இவர்களையெல்லாம் கண்டும் காணாதவனாக அங்கெல்லாம் நின்றும் நில்லாதவனாகச் சீதையைத் தேடியவாறு அனுமன் விரைகின்றான்.

'' இயக்கியர் அரக்கிமார்கள் நாகியர்
எஞ்சு இவ்விஞ்சை
முயல்கறை இயலாததிங்கள்
முகத்தியர் முதலினோரை
மயக்குஅற நாடிஏகும் மாருதி ''
(ஊர்தேடு படலம், பா-119)

அடக்கத்தோடு, அறிவுத் திறத்தோடு, கேட்பார் பிணிக்கும் தகையவாய், கேட்டார்க்கு உரியனவற்றை மட்டும் சுருங்கச் சொல்லி உணர்த்த வல்ல சொற்களாலான உரையாடல் அனுமன் காட்டும் வாழ்வியல் நெறிகளுள் தலையாயது.

விரைவோடும், வினயத்தோடும், ஆசா பாசங்களுக்கு நெகிழ்ந்து விடாத கடமை உணர்வோடும், அகலாது அணுகாது தீக்காய்வார் போலத் தலைவன் அன்பைத் தவறான வழியில் பயன்படுத்திக் கொள்ளாத சான்றாண்மையோடு செயல் புரியும் வாழ்க்கை வழி அனுமன் காட்டும் வாழ்வியல் நெறியாகும்.

இறையை இன்னலிலும் இன்பத்திலும் இடையறாது எண்ணுதல், எல்லாம் இறைவன் செயலே, தான் உற்ற வெற்றியை அவன் அருளாகக் கருதுதல், கண்ணால் கண்டனவற்றைக் கருத்தால் சிந்தித்து மனங்கொளல், காம, குரோத, மத, மாச்சர்யம் முதலிய உள்ளத்து அழுக்குகளுக்கு இடங்கொடாமை அனுமன் காட்டும் நெஞ்ச வாழ்வாகும்.

இவ்வாறு அனுமன் மொழிந்த சொற்கள், ஆற்றிய செயல்கள், நினைந்த சிந்தனைகள் எல்லாம் மானுடன் வாழ்வதற்குரிய சிறந்த வாழ்வியல் நெறிகளாகத் திகழக் காணலாம்.



# சரணாகதி தத்துவம்

மக்கள் நடமாட்டமில்லாத அடர்ந்த காட்டிற்குத் தன்னந்தனியாக ஒருவன் வந்தான். ஏதோ ஓசை கேட்கத் திரும்பிப் பார்த்தான். வேங்கைப் புலி ஒன்று தன்னை நோக்கி வருவதைக் கண்டான். அந்தப் புலியிடமிருந்து எப்படித் தப்புவது என்று யோசித்த அவன் அடுத்த கணம் அருகிலிருந்த மரத்தின் மீது ஏறிக் கொண்டான்.

மரத்தின் உச்சிக்கிளையில் ஒரு கரடி அவனைப் பார்த்துக் கொண்டு அமர்ந்திருப்பதைக் கண்டான். பயத்தினால் நடுநடுங்கிப் போனான். நடுங்குகிற அந்த மனிதனைப் பார்த்துக் கரடி "பயப்படாதே! மரத்தின்மீது ஏறி வந்து சௌக்கியமாக உட்கார்ந்து கொள்" என்று அவனுக்கு அபயமளித்தது.

அவன் பரவலாக இருந்த ஒரு பகுதியில் ஏறி அமர்ந்தான். கிளைகள் கட்டிலைப் போல் படுப்பதற்கு வசதியாக இருந்தன. ஓடி வந்த களைப்பில் படுத்தவன் தூங்கியும் விட்டான். அவனைத் துரத்தி வந்த புலி மரத்தின் அடியில் கால் கடுக்க நின்று கொண்டிருந்தது. பொறுமையை இழந்து மரத்தில் இருக்கும் கரடியைப் பார்த்தது.

"நீயும் நானும் ஒரே இனம். மனிதனே நம் இருவருக்கும் பகைவன். அவனைக் கீழே தள்ளிவிடு. அவனை உண்டு பசியாறுகிறேன்" என்றது. கரடி அதற்கு உடன்படவில்லை. சற்று நேரத்திற்கெல்லாம் கரடியும் தூங்கி விடுகிறது. அப்பொழுது மனிதன் விழித்துக் கொள்கிறான். "அந்தக் கரடியைக் கீழே தள்ளிவிடு; அதைப் புசித்து என் பசியை ஆற்றிக் கொண்டு போய் விடுகிறேன்; நீ உயிர் தப்பலாம்" என்றது புலி.

மனிதன் கரடி தனக்கு உதவி செய்ததைப் பற்றிச் சற்றும் சிந்திக்காமல் தான் உயிர் தப்பினால் போதும் என்ற எண்ணத்தில் தூங்கிக் கொண்டிருந்த கரடியைக் கீழே தள்ளிவிட்டான். கரடி கீழே விழும் போதே மரத்தின் வேறு ஒரு கிளையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டது. கீழே விழவில்லை. அந்தக் கிளையிலிருந்து வேறு கிளைகளைப் பிடித்துக் கொண்டு மரத்தின் மேலே ஏறி வந்து தன் பழைய இடத்தில் அமர்ந்து கொண்டது. மனிதன் பயந்து போனான். அவன் உடல் நடுங்க ஆரம்பித்துவிட்டது.

அவன் நடுங்குவதைப் பார்த்த கரடி அவன்மீது இரக்கப்பட்டது. 'மனிதனே! பயப்படாதே நீ எனக்குத் துரோகம் இழைத்தாய். இருந்தாலும் நான் உன்னைக் கைவிட மாட்டேன். நீ என் அடைக்கலப் பொருள். உனக்கு ஒரு தீங்கும் வராமல் உன்னைக் காப்பாற்றுவது என் கடமை' என்று அவனைத் தேற்றியது. மனிதன் மனம் நெகிழ்ந்து போனான். அந்தக் கரடியைத் தெய்வமாகவே போற்றினான். இதுதான் சரணாகதி தத்துவத்தின் மகோன்னத லட்சணம்; லட்சியம்.

கரடி ஒரு விலங்கு. மனிதனை விட ஓர் அறிவு குறைந்த பிராணி. அந்த விலங்கு கூட மனிதன் தனக்கு இழைத்த தீங்கை மன்னித்துவிடுகிறது. தன்னிடம் அடைக்கலமாக வந்தவனைக் காப்பாற்ற உறுதி கொள்கிறது. அது மனிதனைவிட உயர்ந்து விடுகிறது. ஏன், தெய்வ நிலைக்கே சென்று விடுகிறது. இதுதான் சரணாகதி தத்துவத்தின் சிறப்பு.

மனிதன் தன் விலங்கு உணர்வை எண்ணி வெட்கித் தலை குனிந்தான்; தன் தவற்றை உணர்ந்தான். தன் விலங்கு உணர்விலிருந்து மனித நிலைக்கு உயர்ந்தான். கரடியைத் தெய்வமாகவே பாவித்து வணங்கினான். யாரோ ஒரு மனிதன், அவனை ஏதோ ஒரு கார் மோதித் தள்ளி விட்டுப் போய்விட்டது. அவன் அடிப்பட்டுப் படுகாய முற்றுக்கிடக்கிறான். வேதனையால் துடிதுடிக்கிறான். அவன் வேதனையைக் கண்டு பரிதாபப்படுவது இரக்கச் சித்தம். அந்த மனிதன் படும் துயரத்தைத் தனக்கு ஏற்பட்டதாகவே பாவித்து அவனுக்கு உதவி புரிவது அருள்

திரு. A. N. சுப்ரமணியன்,
குடியாத்தம்.

உள்ளம். இந்த அருள் உள்ளத்திற்கு தான் கருணை என்று பெயர்.

உற்றார் உறவினர்மீது பயன் கருதிப் பற்றும் பாசமும் கொள்வது அன்பு. எந்தப் பயனும் கருதாமல் இன்னோர் உயிரின் துயரைத் துடைக்க முயல்வது பேரருள்; பெருங்கருணை.

கருணை சுரக்கும் உள்ளம் படைத்தவன் கடவுள் நிலைக்கு உயர்கிறான். அன்பு, ஆசை, பாசம், பற்று முதலியவை மனிதப் பண்புகள். கரடி ஐந்தறிவு படைத்த விலங்கு மனிதனுக்குக் கருணை காட்டியது. அது மட்டுமல்ல; தனக்குத் துரோகம் புரிந்த அவனுக்கு அருள் செய்தது. அது தான் தெய்வப் பண்பு. அதனால் தான் அது மனிதனும் வணங்கும் தெய்வ நிலைக்கு உயர்ந்துவிட்டது.

கருணை உள்ளத்தால் விலங்கு கூடத் தெய்வ நிலைக்கு உயரக் கூடுமானால், மனிதன் உயரக் கேட்கவா வேண்டும்.

# தி. தி. தேவஸ்தான சமய நூல் வெளியீடுகள்

## தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. | ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம். (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. | சித்திரத்திருப்பாவை பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. | கண்ணன் பேசுகிறான் —நஜன் | 0—50 |

## சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸ்வரா (அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம்) | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வரசுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூலமாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "உதவி செயலாட்சித் தலைவர்(எஸ்), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரிக்கு ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

இந்தப் பேருண்மையைப் புலப்படுத்துவதுதான் சரணாகதி தத்துவம்.

இராமாயண மகா காவியமே சரணாகதி தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது தானே? அதனால்தான் அவனைச் சரணாகதி சாஸ்திரம் என்று சொல்லுகிறோம். வேதத்தின் சாரமான இந்தக் கருணாமிருத சாகரம் தான் மக்களைக் கரையேற்றுவது; கருணை சுரந்து காப்பாற்றுவது. இதைத்தான்,

கற்பார் இராமபிரானை அல்லால்
  மற்றும் கற்பரோ
புற்பாமுதலாப் புல்லெறும்பு ஆதி
  ஒன்றின்றியே
நற்பால் அயோத்தியில் வாழும்
  சராசரம் முற்றவும்
நற்பாலுக்குய்த்தனன் நான்முகனார்
  பெற்ற நாட்டுளே.

என்கிறார் நம்மாழ்வார். ஸ்ரீ ராமபிரானின் தெய்வீகக் குணங்களைக் கற்பதில் அந்த அளவுக்கு ஆழ்வார் ஈடுபாடு கொண்டிருந்தார். இராமனின் கல்யாண குணங்களில் மணி மகுடமாகத் திகழ்பவை கருணையும் அதன் பயனாகிய அபயதான விரதமும்தான்.

பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும் பகவான் கருணையே வடிவமானவன். ஜீவர்களின் மீதுள்ள பெருங் கருணையால் பரம பதத்திலுள்ள பரத்துவ நிலையிலிருந்து இறங்கி வந்து பாற்கடலில் பள்ளி கொள்ளும் வியூக நிலையை மேற்கொண்டான். அதிலும் திருப்தியடையாமல் அவதார நிலையாகிய விபவ நிலையில் இறங்கி வந்து, அடியார்களோடு கலந்து உறவாடி அவர்களைக் கடைத்தேற்ற உள்ளம் பற்றினான். அத்தகைய அவதாரங்களில், எல்லா நற்குணங்களையும் கொண்டு விளங்கிய இராமாவதாரம் தலை சிறந்தது. அதனால்தான் நம்மாழ்வார் "கற்பார் இராமபிரான் அல்லால்" என்று சொல்கிறார்.

இராமன் ஏழை எளியவர்களுக்கு அருள் புரிபவன் மட்டுமல்ல. பகை

வனுக்கும் அருள் புரியும் பரம தயா நிதி அவன். "நாராயணனே நமக்கே பறை தருவான்" என்று கோதை நாச்சியார் கூறுகிறார். "பாற்கடலில் பையத்துயின்ற பரமனடி பாடி" என்று பாடுகிறார். இது இறைவனின் இரண்டாம் நிலையாகிய வியூகத்தைக் குறிப்பது.

"ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி" என்று பாடிப் பரவுகிறார். இது எம்பெருமானின் மூன்றாவது படியாகிய அவதார நிலையைச் சுட்டிக் காட்டுகிறது.

அவதாரங்களிலே இராமாவதாரம் மிகச் சிறந்தது. காத்தற் கடவுளாகிய பரம்பொருள் ஆருயிர்களுக்கெல்லாம் அபய பிரதானம் அளிப்பதற்காகவே இராமனாக அவதரிக்கிறார். இந்த அவதாரத்தைத் தனிப் பெரும் சிறப்புடையதாக அடியார்கள் போற்றுகிறார்கள்.

"கனைத்திளங் கற்றெருமை கன்றுக்
கிரங்கி
நினைத்துமுலை வழியே நின்று பால்
சோர
நனைத்தில்லம் சேர்க்கும் நற்செல்வன்
தங்காய்
பனித்தலைவிழநின் வாசற் கடைபற்றி
சினத்தினால் தென்னிலங்கைக்
கோமானைச் செற்ற
மனத்துக்கினியானைப் பாடவும் நீ வாய்
திறவாய்"

என்கிறார் சூடிக்கொடுத்த சுடர்க் கொடியான ஆண்டாள். "மனத்துக் கினியான்" என்று இராமனின் சிறப்பைச் சொல்கிறார்.

இராகவனின் தனிப்பெரும் கருணை இதயம்தான் கருணா விலாசம்! இராமனின் கருணை உள்ளம்தான் கருணையற்ற உலகத்தையும் அருள் பாலித்து வருகிறது.

பூமித் தேவியே ஆண்டாளாக அவதரித்தவள். பூமித் தேவிக்கு அளவற்ற அருள் சொரிவதாக விராதன் ஐயனைத் துதிக்கிறான்.

அரவாகிச் சுமத்தியால் அணியெயிற்
றின் ஏந்துதியால்
ஒரு வாயில் விழுங்குதியால் ஓரடியால்
ஒளித்தியால்
திருவான நிலமகளை இதையறிந்தால்
சீருளோ
மருவாரும் துழாயலங்கல் மணி மார்
பில்வைகுவான்.

"பகவான் ஆதிசேடனாகிப் பூமிப் பிராட்டியைச் சுமக்கிறான். வராக வடிவெடுத்துக் கொம்பிலே தாங்கிக் கொள்கிறான். திருவாயில் விழுங்குகிறான், ஓரடியால் மறைத்து நிற்கிறான். இவ்வாறு பல நிலைகளில் பூமிப் பிராட்டிக்கு அருள் புரிவதைக் கண்டால் பெரிய பிராட்டியார் ஊடல் கொள்ள மாட்டாளா?" என்று நயம்படக் கேட்கிறான் விராதன்.

பூமிக்குக் கருணை செய்தால் தனக்குக் கருணை செய்தது போலவும் தனக்குக் கருணை புரிந்தால் பூமிக்கு, பூமியிலுள்ள மக்களுக் கருணை பொழிவது போலவும் பாவித்ததனால்தான் 'மனத்துக்கினியான்' என்று அந்த அற்புதமான சொற்பிரயோகம் ஆண்டாளின் இதயத்தில் எழுந்தது.

இராமபிரான் ரகுவம்சத்தென்றல். அதனால்தான் அவனை ராகவன் என்கிறோம். கருத்த மரபினன் ஆதலால் காகுத்தன் என்கிறோம். தசரத குமாரன் என்பதால் அவனை தாசரதி என்கிறோம். அவன் முன்னோர்களெல்லாம் கருணா விலாசத்தினால் சிறப்பெய்தியவர்கள். ஆதலாலே அவன் தோன்றிய மரபைச் சொல்லி அவனைச் சிறப்பிக்கிறோம். குலசேகராழ்வார் அவனது முன்னோர்களை தாசரதி, ராகவன், காகுத்தன் ஆகிய கருணா மூர்த்திகளின் பெயரைச் சொல்லி அவன் கருணையை அனுபவிக்கிறார்.

காகுத்ஸன்—இது சமஸ்கிருதச் சொல். ககுதி திஷ்டதி இதிகாகுத்ஸ்த: என்று பிரியும். ககுதி என்பது விருஷபத்தின் திமிஸ்; திஷ்டதி-உட்கார்ந்திருப்பவன். தேவ அசுர யுத்தத்தில் காகுத்த மன்னன் எருதின் திமிலில் ஆரோகணித்துப் போர் புரிந்து அசுரர்களை வென்று இந்திரனைக் காப்பாற்றினான். அந்த வெற்றிப் பிரபாவத்தைப் பறைசாற்றுவதே காகுத்தன் என்ற திருநாமம்.

விசுவாமித்ர முனிவர் தசரதரிடம் வந்து கூறுவதைக் கேளுங்கள். "என்னைப் போன்ற முனிவர்களுக்கும் தேவர்களுக்கும் இடையூறு ஏற்பட்டால் கைலயங்கிரி, திருப்பாற்கடல், பிரம்ம லோகம், தேவ லோகம் முதலிய இடங்களுக்குச் செல்வோம். இல்லையேல், பொன்னகரமாகிய உன்னுடைய அயோத்தி மாநகருக்கு வருவோம். இவை தவிர எங்களுக்குப் புகலிடம் ஏது?" என்று வழிவழியாக அடைக்கலத்துக்குச்சிறந்த அயோத்தி அரசின் மரபினைப் பேசுகிறார்.

வசிஷ்டர் வாயால் பிரம்ம ரிஷி என்று கூறப்பட்டது போல் விசுவாமித்திரர் வாயால் தசரதன் 'அபயப் பிரதன்' என்று போற்றப் படுகிறான்.

தசரதனைப் பாராட்டுவதன்மூலம் இராமனின் சரணாகதி தத்துவத்தையே அவர் பாராட்டுகிறார்.

அடைக்கலம் அளிப்பதில் பாரம் பரியம் உடையவன் நெடுமாலாகிய காகுத்தன். அபயப் பிரதானத்தின் சின்னம் அவன்; சிகரம் அவன்! அதனால்தான் அவனது தனிப்பெருங் கருணையை 'காகுத்தன் கருணை' என்று புகழ்ந்து பாராட்டுகிறோம். ஏழை, ஏதலன் என்ற வேறுபாடின்றி எவ்வுயிருக்கும் அருள் சுரப்பதே காகுத்தன் கருணை.

(ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் இதழிலிருந்து தொகுத்து எழுதியது.)



# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# நன்கொடைத் திட்டத்தின் கீழ் குடில்கள்

திருமலையில் யாத்திரிகர்களின் நலனுக்காக நன்கொடைத் தொகைகளின் மூலம் பல தங்குவசதிகளான குடில்கள், அறைத்தொகுதிகள், சத்திரங்கள், விருந்தினர் விடுதிகள் போன்றவற்றைக் கட்டுவதற்குப் பொது மக்களிடமிருந்து தேவஸ்தான மேலாண்மை நன்கொடைகள் பல பெற்று வருகின்றது. இத்திட்டத்தின் விவரங்கள் பின் வருமாறு:

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதி திட்டம்

கோயிலுக்கு வடகிழக்குப் பக்கத்தில் இந்த விருந்தினர் விடுதி கட்டப்படும். இவ்விடுதி மூன்று தளங்களையும், ஒவ்வொரு தளமும் 50 அறைத் தொகுதிகளையும், ஒவ்வொரு அறைத்தொகுதியும் 600 சதுர அடி கட்டிடப் பரப்பளவில் விளங்கும்படியாக 14×18அடி என்ற பரப்பளவில் உள்ள அறைகளையும் கொண்டு விளங்கும். மேலும் ஒரு பொதுத் தாழ்வாரமும் கொண்டு விளங்கும்.

* ஒவ்வொரு அறைத்தொகுதிக்கும் நன்கொடையாளர் ரூ. 60,000 வழங்கவேண்டும்.

## ஸப்தகிரி தர்மசாலை

ரூ. 8.5 கோடி செலவில் "ஸப்தகிரி சத்திரங்கள்" எனும் பெயரில் இம்மாபெரும் திட்டம் மேற்கொள்ளப்படும். ஒவ்வொரு அறைத்தொகுதியும் ரூ. 80,000/- செலவில் கட்டப்படும்.

ஆகும் செலவில் ரூ. 40,000/- நன்கொடையாளர் வழங்கினால், அவ்வறைத்தொகுதி அவருடைய பெயரில் அமையும்.

ஏ. டி. சி. மற்றும் எம். பி. சி. காட்டேஜுகளில் முதல் தளத்தில் காட்டேஜுகள் கட்டுவதற்கு நன்கொடைகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

## பலனகள்

நன்கொடையாளர்கள் வருடத்தில் 60 நாட்களுக்கு இலவசமாக அவருடைய நன்கொடை அறைத் தொகுதியில் அல்லது குடிலில் தங்கலாம். ஆனால் இந்தச்சலுகை நிறுவனங்களுக்கும், வாணிகக் கழகங்களுக்கும் 15 வருடங்களுக்கு மட்டுமே அளிக்கப்படும்.

இத் தங்குவசதி ஒதுக்கீடுகளின் போது நன்கொடையாளர்களின் உற்றார் உறவினர்களுக்கு முன்னுரிமை வழங்கப்படும்.

ஒவ்வொரு அறைத்தொகுதி அல்லது குடிலிலும் சம்பந்தப்பட்ட நன்கொடையாளர்களின் பெயர்ப் பலகைகள் நிரந்தரமாகப் பொருத்தப்படும்.

மேற்படி திட்டங்களில் பங்கேற்க விரும்பும் நன்கொடையாளர்கள் அதற்கான தொகையினைச் "செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி." எனும் பெயரில் காசோலை மூலமாகப் பெற்று, தேவையான தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் இணைத்து அவற்றை, "தலைமை கணக்கு அலுவலர் தி. தி. தேவஸ்தானம் திருப்பதி" எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும்.

மேலும் விவரங்களுக்கு "செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

செயலாட்சித் தலைவர்.

" தரும் பொருள் சிறிதே; பெறும் அருள் பெரிதே "

# வால்மீகி திருவுள்ள விளக்கு

## ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின் மொழிபெயர்ப்பு

இனி இரண்டாவது காரணம் கூறுகிறார் 'ஏவம்' என்று தொடங்கி. யுத்தே=தக்ஷயாகத்திற்குப் பிறகு தேவர்களின் ஸந்தேகத்தைத் தீர்ப்பதற்காகப் பிரமதேவனால் விஷ்ணுவுக்கும் சிவனுக்கும் உண்டாக்கப்பட்ட போரில், ஹூங்காரமாத்ராத்= ஹூம் என்று அதட்டுவதனால் மட்டும்,த்ரிணயந ஜடதா ஆபாதகத்வாத்=முக்கண்ணனான ருத்திரனுக்கு உணர்ச்சியின்மையை உண்டாக்குவதனால் என்பதே அது. இக்காரணம்—பாலகாண்டம் எழுபத்தைந்தாம் ஸர்க்கத்தில் 'விஷ்ணுவுக்கும் நீலகண்டனான சிவனுக்கும் பகைமை உண்டானபோது, ஒருவர் மற்றொருவரை வெல்ல விரும்பிய அவ்விருவர்க்கும் பெரும் போரொன்று கண்டவர்கள் அஞ்சி மயிர்க் கூச்செறியும்படியாக உண்டாயிற்று. அப்போது விஷ்ணுவின் ஹூங்காரத்தினால், அச்சுறுத்தும் பராக்ரமமுடைய சிவதநுஸ்ஸு முறியடிக்கப்பட்டது. பின்பு முக்கண்ணுடைய மகாதேவனும் ஜடனாக—அறிவிழந்தவனாக ஆக்கப்பட்டான்' (15, 16) என்ற பரசுராம வாக்யத்தில் விளக்கப்பட்டது. இவ்வாறு ஹூங்காரத்தினாலேயே சிவனை ஜடனாக்கிய விஷ்ணுவுக்குச் சிவபிரானைவிட உயர்த்தியை அவசியமாக இசைய வேண்டுமன்றோ என்று கருத்து.

இனி மூன்றும் காரணம் கூறுகிறார் 'நிர்ணீதத்வாத்' என்பது முதலாக. பசுபதி தநுஷ: ஜ்ரும்பணம் த்ருஷ்டவத்பி: தேவை: ச்ரேஷ்டத்வேந நிர்ணீதத்வாத்' என்பதே அது. ருத்திரனது வில்லின் முறிதலைக் கண்ட தேவர்களால் உயர்ந்தவராகக் காரணத்தோடு நிச்சயிக்கப்பட்டபடியால் என்று பொருள். நம்மைவிட அறிவுமிக்க தேவர்கள், விஷ்ணுவின் ஹூங்காரமாத்திரத்தால் ருத்ரதநுஸ்ஸு முறிந்ததைக் கண்டு ருத்ரனைவிட விஷ்ணுவே அறிவாற்றல்களால் உயர்ந்தவரென்று நிச்சயம் செய்தபடியினால் என்பது தேர்ந்த பொருள்.

பாலகாண்டம் எழுபத்தைந்தாம் ஸர்க்கத்தில், 'விஷ்ணுவுக்கும் சிவபிரானுக்கும் இடையில் யார் அறிவாற்றல் மிக்கவரென்பதை அறிய விரும்பிய தேவர்களின் கருத்தையறிந்து நான்முகக் கடவுள் அவர்களின் ஐயத்தை நீக்குவதற்காக அவ்விருவருக்கும் (ஒருவர் மற்றொருவரை இகழ்ந்ததாகக் கோள் சொல்லிப்) போரையுண்டாக்க, அவ்விருவர்க்கும் காண்போர் மயிர்ச் கூச்செறிந்து அஞ்சும்படியான பெரும்போர் நிகழ்ந்தது. அப்போது ஸர்வேச்வரனான விஷ்ணு பகவான் ஹூம்மென்று அதட்டியே சிவன் கையிலிருந்தவில்லை முறித்து அப்பிரானையும் அசைய முடியாமல் உணர்ச்சியறும்படிச் செய்தார். இங்ஙனம் திருமாலின் ஹூங்காரத்தால் மட்டுமே சிவன் ஜடனானதையும் அவன் வில் முறிந்ததையும் கண்டு தேவர்கள் சிவனைக் காட்டிலும் விஷ்ணுவே உயர்ந்தவரென்று அறுதியிட்டனர்' என்று தக்ஷயாகத்திற்குப் பிறகு நடந்த செய்தி பரசுராமரால் வருணிக்கப்பட்டதாகக் காண்கிறது.

"திரிபுராசுரவதத்திற்குப் பின்பு நீலகண்டனுக்கும் விஷ்ணுவுக்கும் உள்ள பலாபலங்களை அறிய விருப்பத்தினால் தேவர்கள் அனைவரும் 'இவ்விருவரில் அதிக பலமுடையவர் யார்' என்று பிரமனை வினவினர். உண்மை யுரைப்பவரில் தலைவராகிய அப்பிரமதேவன் அத்தேவரின் கருத்தையறிந்து (உபதேசத்தினாலன்றிச், செய்கையின் மூலமாகவே அவர்களைத் தெளிவிக்க விரும்பி அவ்விருவருக்கும் பகைமையை உண்டாக்கினர். பகைமை உண்டாகவே ஒருவரை ஒருவர் ஜயிக்க விரும்பிய அவ்விருவர்க்கும் அனைவருக்கும் அச்சத்தினால் மயிர்க்கூச்செறிதலை யுண்டாக்குமதான போர் உண்டாயிற்று. அப்போது விஷ்ணுவின் ஹூங்காரத்தினால் பயங்கரமான பராக்ரமமுள்ள சிவன்வில் முறியடிக்கப்பட்டது. முக்கண்ணனான மகாதேவனும் ஜடனாக்கப்பட்டான். அப்போது தேவரும் முனிவரும் சாரணரும் ஒன்று கூடி, தேவர் தலைவர்களான விஷ்ணு சிவர்களை வேண்டிக் கொள்ள அவ்விருவரும் போரில் நின்றும் ஓய்வு பெற்றனர். அப்போது விஷ்ணுவின் பராக்ரமத்தால் அச்சிவதநுஸ்ஸு ஒடிந்ததைக் காணலுற்ற தேவர்களும் ரிஷிகணங்களும் சிவனைக்காட்டிலும் விஷ்ணுவை அறிவு ஆற்றல் வீரமாகியவற்றால் உயர்ந்தவராக நிச்சயித்தனர்" என்று (பால 75. 14-19) கூறப்பட்டமை காண்க.

இங்ஙனம் முற்கூறிய மூன்று காரணங்களால் வால்மீகி முனிவர் விஷ்ணுவின் பரத்துவத்தை ஸாதிக்

தமிழாக்கம் :
திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்.
சிரோமணி வித்வான்
திருப்பதி.

கிருரென்கிருர் அப்ஜநாபம்' என்று
தொடங்கி. அப்ஜநாபம்=தாமரை
யுந்தியோ ப்ர்ஹ்மாவையும் தன்
னுந்தித் மரையில் படைத்த பக
வானுை நாராயணனை. முநிரபி=
வால் முனிவரும், சிவாத் உத்
த =சிவனைக் காட்டிலும் மிக
ந்தவராக, நிச்சிகாய=நிச்சயித்
ர். கீழ்க்கூறிய மூன்று காரணங்
ளை விளக்கிய வால்மீகி முனிவருக்கு
)துவே கருத்தென்றபடி.

இனி, இவ்விதமாக தக்ஷயாகத்திற்குப் பின்பு தேவர்கள் விஷ்ணுவைச் சிவபிரானைவிட உயர்ந்தவரென்று நிச்சயித்தனரென்று கூறிய பரசுராமருடைய வாக்கியத்தின் மூலமாக வால்மீகி முனிவர் முன்பு நடந்த செய்தியைக் கூறியதனுல், வேருெரு விஷயமும் அவரால் தன்னடையே குறிப்பாகக் காட்டப்பட்டதாகிறதென்கிருர் 'இத்தம்' என்று தொடங்கும் ச்லோகத்தினுல்.

**ச்லோகம் 6 :**

இத்தம் ப்ரஹ்மாதி தேவைர் ஹரி
ரதிகதயா நிச்சிதோऽபூத் புரேதி,
ப்ராக்வ்ருத்தாந்தம் ப்ருவாணோ முநி
ரய மகிலாந் மூகயத்யர்த்ததஸ் தாந்|
லக்ஷ்மீகாந்தஸ்ய தக்ஷாத்வரவிஹதி
க்ருதா வீரபத்ரேண பும்ஸா, ப்ரா
ஹுர்யே நிர்ஜிதத்வம் ஜகுரபிச
ததோ ந்யூநதாம் பார்வதீசாத் ||

**பதவுரை :**

இத்தம்=முன் ச்லோகத்தில் கூறியபடி, புரா=முற்காலத்திலே-அதாவது தக்ஷயாகம் நடந்த பிற்காலத்திலே, ப்ரஹ்மா ஆதி தேவை:=பிரமன் முதலான தேவர்களாலே, ஹரி:=விஷ்ணு, அதிகதயா = மிக உயர்ந்தவராக, நிச்சித: அபூத்=நிச்சயிக்கப்பட்டவராக ஆனுர், இதி ப்ராக் வ்ருத்தாந்தம்=என்ற முன் நடந்த செய்தியை, ப்ருவாண:=(பரசுராமரது பேச்சின் மூலமாகச்) சொல்லா நின்ற, அயம் முநி:=இவ்வால்மீகி முனிவர், -யே=(சிவபிரானைப் பரம்பொருளென்று மருள் கொண்ட) யாவர், லக்ஷ்மீ காந்தஸ்ய=திருமகள் நாதனுன விஷ்ணுவுக்கு, தக்ஷ அத்வர விஹதி க்ருதா=தக்ஷன் செய்த யாகத்தின் அழிவை உண்டாக்கிய, வீரபத்ரேண=வீரபத்திரனென்று பெயர் பெற்ற, பும்ஸா=சிவனுல் படைக்கப்பட்ட புருஷனுலே, நிர்ஜிதத்வம்=வெல்லப்பட்டமையை ப்ராஹு: = சொல்லுகிருர்களோ, தத:=அந்தகாரணத்தால்—அதாவது சிவனடியார் கூட்டத்தில் சேர்ந்தவனுகிய வீரபத்திரனுல் வெல்லப்பட்டமை என்னும் காரணத்தால், (விஷ்ணுவுக்கு) பார்வதீ ஈசாத்=மலைமகளின் நாதனுகிய சிவபெருமானைவிட, ந்யூநதாம்=தாழ்ச்சியை, ஜகுரபி=சொல்லவும் செய்கிருர்களோ, தாந்=அவர்களை, அர்த்தாத்=தன்னடையே—அதாவது தனிப்பட ஒன்றும் சொல்லாமல் முன் ச்லோகத்தில் கூறிய மூன்று காரணங்களாலேயே, மூகயதி=ஊமையாக ஆக்குகிருர்.

**விசேடவுரை :**

சிவபெருமானுக்கு விஷ்ணுமூர்த்தியைவிட உயர்த்தியைச் சாதிப்பதற்காக வீரசைவர்கள் 'தக்ஷ ப்ரஜாபதி செய்த யாகத்தில் அவன் தனக்கு ஹவிஸ்ஸின் பங்கைத் தராதபடியினுலும், (தக்ஷனின் மகளும் சிவபெருமானின் மனைவியுமான) தாக்ஷாயணி தன் தகப்பனுல் அவமதிக்கப்பட்டுத் தன் தேஹத்தை (யாகாக்நியில் குதித்து) விட்டபடியினுலும் கோபங்கொண்ட மகாதேவன் (சிவபெருமான்) தக்ஷயாகத்தை அழித்தற் பொருட்டு வீரபத்திரனென்னும் பிரமதக்கணத் தலைவனை அனுப்பினுன். அவனும் பிரமதகணங்கள் பலவற்றுடன் சூழப்பெற்று தக்ஷ யாக சாலைக்குச் சென்று அங்கிருந்த எல்லா முனிவர்களையும் தேவர்களையும் பாணங்கள் பல கொண்டு அடித்துப் புண்ணுக்கினுன். இவ்வாறு வீரபத்திரன் அம்புமழையைப் பொழியுமளவில் அதனைப் பொறுக்க முடியாத தேவர்கள் விலங்கு முதலியவற்றின் உருவங்கொண்டு ஓடி விட்டனர். விஷ்ணுவும் மானுருவந்தரித்து ஓடி விட்டார். இங்ஙனம் சைவகணத்தில் சேர்ந்த ஒருவனுன வீரபத்திரனுல் வெல்லப்பட்ட இவ்விஷ்ணு சிவபிரானைவிடத் தாழ்ந்தவர்தான். அவனது அடியார் கணத்தைச் சேர்ந்தவனுல் ஜயிக்கப்பட்டவன் அவனைவிடத் தாழ்ந்தவனென்பது தகுதியுடையதாகையால்' என்றிப்படிக் கூறுகின்றனர்.

அப்படி இவர்கள் கூறுவது பொருந்தாது; எந்த தக்ஷ யாகத்தில் விஷ்ணு வீரபத்திரனுல் வெல்லப்பட்டமை கூறப்படுகிறதோ அதற்குப் பின்பே, விஷ்ணு சிவர்களில் யார் உயர்ந்தவரென்று ஸந்தேஹங்கொண்ட தேவர்களின் அந்த ஸந்தேஹத்தைப் போக்க விரும்பிய பிரமதேவன் அவ்விருவருக்கும் பகைமையுண்டாக்கப் பின்பு அவர்களுக்குப் போர் நிகழ அப்போது விஷ்ணு ஹுங்காரமாத்திரத்தால் சிவதநுஸ்ஸை உடைத்ததையும் சிவபிரானை ஜடனுக ஆக்கியதையும் பார்த்து அறிவிற் சிறந்த தேவர்களால் சிவபிரானைவிட விஷ்ணு உயர்ந்தவராக நிச்சயிக்கப்பட்டாரென்று முன் நடந்த செய்தி-சைவர்கள் கூற்றுக்கு முரணுகப் பரசுராமரால் வருணிக்கப்பட்டபடியால் என்க. தக்ஷயாகத்தில் வீரபத்திரன் விஷ்ணுவை வென்றது உண்மையாயிருக்குமானுல், அவ்விஷ்ணுவுக்கு ஹுங்கார மாத்திரத்தால் சிவனை ஸ்தம்பிக்கச் செய்யும் சக்தியுண்டென்று பரசுராமர் கூறியது பொருந்தாதன்ருே? ஆகையால் தக்ஷயாகத்தில் வீரபத்திரன் விஷ்ணுவை வென்றிகொண்டது ப்ரமாணத்திற்கு முரணுனதும் யுக்தியற்றதுமாகையால் பொருந்தவே பொருந்தாது. ஆக இவ்வாறு முன்பு நடைபெற்ற சரிதத்தை (பரசுராமர் மூலமாகக்) கூருநின்ற இவ் வால்மீகி முனிவர், முரணுகச் சொல்லும் சைவர்களை, தாம் கூறுவதற்கு முரணுகவேருென்றும் சொல்ல வல்லமை இல்லாதவர்களாக ஆக்குகிருர் என்பது இந்த ச்லோகத்தின் கருத்து.

## தூய பொருள்கள் எவை?

பிறந்த பசுங்குழந்தை தூய்மையானது. அறிவு தூயது, கவிதை தூய்மை நிறைந்தது, பசு பவித்திரமானது.

சமூகத்தில் நன்னடத்தையுடன் வாழ்கிறவர்கள் தூயவர், நாட்டுக்காகத் தியாகம் செய்யும் வீரன் தூயவன், பலருக்கு நலம் விளைவிக்கும் செல்வம் தூயது.

செயல் திறமை தூயது, புஷ்டியளிக்கும் உணவு தூயது. ஆனந்தம் தூயது, குடும்பத்தைக் காக்கும் தலைவன் தூயவன், நல்வாக்கு எப்போதும் பவித்திரமானது, துயர்நீக்கும் நண்பன் தூயவன்.

— ஸாம வேதம்.

தொகுப்பு : தேனி எம். சுப்பிரமணி.

## ஒழுக்கம்

தற்காலிக சுகபோகங்களுக்காக நாம் நம்முடைய ஒழுக்கத்தைப் பழுதாக்கிக் கொள்ளலாகாது. வாழ்வில் இன்பம் பெறுவதற்குரிய வழி நம்முடைய ஒழுக்கத்தைப் பாதுகாப்பதையே பொறுத்ததாகும். ஒழுக்கம் தவறினால் அதை எளிதில் பழுது பார்க்க முடியாது.

நம்முடைய தேகமும் உள்ளமும் ஆண்டவனுடைய கோவில். அதைச் சுத்தமாக வைத்துக் காப்பது நம் கடமை.

— ராஜாஜி.

கமலா மாரியப்பன்:

விஷ்ணு சிவர்களின் பலாபலங்களைப் பரீக்ஷை செய்வதற்காகத் தேவர்கள் அவ்விருவர்க்கும் மூட்டிய போரானது தக்ஷயாகத்திற்குப் பின்பு நடைபெற்றது. தக்ஷயாகமோவெனில் திரிபுராசுரவதத்திற்குப் பின்பு நடந்தது: — எப்படியென்றால் — 'பெரும் புகழ்படைத்த சிவபெருமான் மிகவும் சினம் கொண்டவராய் விதேஹ தேசத்திலுள்ள ராஜ ருஷியான தேவராதன் கையில் பாணங்களுடன் வில்லைக் கொடுத்தார்' (பால 75-20) என்று விஷ்ணு சிவர்களுக்குப் போர் நடந்த பிறகு சிவனால் தேவராதன் கையில் கொடுக்கப்பட்டதாகப் பரசுராமரால் கூறப்பட்டதும் இராம பிரானால் (ஸீதா கல்யாணத்திற்கு முன்பு) முறிக்கப்பட்டதுமான வில்லையே, 'முன்பு பராக்ரமசாலியான சிவபெருமான் தக்ஷயாகத்தை நாசம் செய்த ஸமயத்தில் வில்லை வளைத்து' (பால 66-10) என்று தொடங்கி ஜனகர் தமக்கு சிவதநுஸ்ஸு கிடைத்த வழியை வருணிக்கும்போது, தக்ஷயாக நாசகாலத்தில் சிவபெருமான் தன் கையில் தரித்திருந்ததாகக் கூறியதனால், தக்ஷயாக நாசம் நடந்த சமயத்தில் சிவபெருமான் கையில் இருந்த வில்லானது, அதற்குப் பின்பு நடைபெற்ற விஷ்ணு சிவர்களின் யுத்தத்திற்குப் பிறகு தேவராதனிடம் வைக்கப்பட்டதென்று நிச்சயிக்க வேண்டியிருப்பதனால் விஷ்ணு சிவர்களின் யுத்தம் தக்ஷயாகத்திற்குப் பின்பு நடந்ததென்று பெறப்படுதலாலும், அந்த வில்லே, 'மிகவுயர்ந்தவையும் உலகமெங்கும் பிரசித்தமானவையும் உறுதியானவையும் பகைவரை அழிப்பதில் ஆற்றல் படைத்தவையும் விற்களில் முக்கியமானவையுமாகிய இவ்விரண்டு விற்களும் தேவ தச்சனான விச்வகர்மாவினால் மிகவும் முயன்று செய்யப்பட்டன. அவற்றில் ஒன்றினைத் தேவர்கள் திரிபுராசுரருடன் போர் புரிய விரும்பிய முக்கண்ணனுக்குக் கொடுத்தனர். காகுத்தா, மனிதர் தலைவா, இராமா, திரிபுராசுரர்களை அழித்த அந்தச் சிவதநுஸ்ஸே இப்போது உன்னால் முறியடிக்கப்பட்டது' (பால 75-11, 12) என்று திரிபுராசுர வதத்திற்குக் கருவியாயிருந்ததென்று பரசுராமர் கூறியதனால், திரிபுராசுரவதம் தக்ஷயாகத்திற்குப் பின்பு நடந்திருந்தால் - தக்ஷயாக நாசம் நிகழ்ந்த பிறகே வில்லைத் தேவராதனிடம் கொடுத்ததாக ஜனகர் வருணித்தது பொருந்தாமற் போய் விடுமாகையால், திரிபுராசுரவதம் நடந்த பிறகே தக்ஷயாகம் நடந்ததாகப் பெறப்படுதலாலும், முதலில் திரிபுராசுரவதம் பிறகு தக்ஷயாகம் அதற்கும் பின்பு விஷ்ணு சிவயுத்தம் என்று இந்த முறையில் நடைபெற்றனவாகக் கொள்வது தகுதியுடையது. இது கொண்டு தக்ஷ யாகத்தில் வீரபத்திரனால் விஷ்ணு வெல்லப்பட்டாரென்று சைவர் கூறுவது யுக்திக்கு முரண்பட்டதென்று காட்டப்பட்டது.

தக்ஷ யாகத்தில் விஷ்ணு வீரபத்திரனால் வெல்லப்பட்டாரென்று கூறுவது ப்ரமாணத்திற்கும் முரண்பட்டதாகும்; தக்ஷயாகநாசம் உண்டாவதற்கு முன்பு விஷ்ணு அந்த யாக சாலைக்கே வராமையால் வராதவர் வெல்லப்பட்டதாகக் கூறுவது பொருந்தாமையால் என்க.

ஸ்ரீ பாகவதம் நான்காம் ஸ்கந்தம் ஆறுமத்தியாயத்தில் 'பூஜிக்கத் தக்க பிரமதேவனும் எல்லாப் பொருள்களுக்கும் ஆத்மாவான நாராயணனும் தக்ஷ யாகம் நாசமடையப் போவதை முன்னதாகவே அறிந்து தக்ஷனது யாகத்திற்குச் செல்லவில்லை' (3) என்று கூறப்பட்டிருப்பது காண்க.

(36-ம் பக்கம் பார்க்க)

# சத்திய சோதனை

வன வாசத்தின்போது தாங்கள் அடைந்த துன்பங்களும் துயரங்களும் பாண்டவர்களுக்குக் கௌரவர்களிடத்தில் தீராத பகையை உருவாக்கிற்று. அதன் விளைவு...... பாரத யுத்தம் தோன்றியது.

போர் புரிவதும் க்ஷத்திரிய தர்மம். போரில் பகைவர்களை வெல்வதும் க்ஷத்திரிய தர்மம். வென்ற பின் ராஜ்ய பாரத்தை மேற்கொள்வதும் க்ஷத்திரிய தர்மம் அல்லவா? ஆனால்.. சகோதரர்களைக் கொன்று வென்ற ராஜ்யத்தை ஆள்வதில் பாண்டவர்கள் சந்தோஷத்தைக் காணவில்லை. கடமைக்காக பாண்டவர்கள் பொறுப்பேற்று பல காலம் ஆட்சி செய்தார்களே தவிர, அவர்களுக்கு அதில் முழுத் திருப்தி உண்டாகவில்லை. கண்ணனின் மறைவுக்குப் பின் பாண்டவர்கள் அபிமன்யுவின் மகனான பரிஷத்து என்பவனுக்கு முடிசூட்டி ராஜ்ய பாரத்தை அவனிடம் ஒப்படைத்துவிட்டு ஐவரும் திரௌபதியுடன் தீர்த்த யாத்திரைக்குப் போனார்கள். பல இடங்களுக்கும் போன பின் அவர்கள் இமய மலையை அடைந்தார்கள். அப்போது நாய் ஒன்றும் அவர்களோடு சேர்ந்து செல்ல ஆரம்பித்தது. செல்லும் வழியில் திரௌபதியும் தர்ம புத்திரனின் நான்கு தம்பிகளும் உடல் பாரத்தை விட்டு உலக வாழ்வைத் துறந்தார்கள். பெற்றிருந்த அனுபவங்களும் அறிவுக் கூர்மையும் தர்ம புத்திரனுக்கு மெய்பொருளை உணர்த்தவே, மனைவியின் மரணமும் தம்பிகளின் மரணமும் அவனைக் கவலை கொள்ளச் செய்யவில்லை. அதனால் அவன் மனந் தளராமல் தன் வழியில் தொடர்ந்து சென்று கொண்டிருந்தான்.

தன்னைத் தொடர்ந்து வந்து கொண்டிருக்கும் நாயுடன் தர்ம புத்திரன் நெடுந்தூரம் வந்த பின், ரதத்தோடு தர்ம புத்திரனின் எதிரில் வந்து நின்றான் இந்திரன்.

"தர்ம புத்திரனே! உன் தம்பிகளும் திரௌபதியும் இவ்வுலக வாழ்வைவிட்டு சொர்க்க லோகத்திற்குச் சென்றுவிட்டார்கள். தனியொருவனாய் நீ மட்டும் இன்னும் ஏன் சென்று கொண்டிருக்கிறாய்? உன்னை இந்திர லோகத்துக்கு அழைத்துப் போகவே வந்தேன். வா! ரதத்தில் ஏறு." என்றான் இந்திரன்.

தர்ம புத்திரன் தேரில் ஏறப் போகும்போது நாயும் தேரில் ஏற முயன்றது. அப்போது, "சொர்க்கத்தில் நாய்க்கு இடமேது?" என்று இந்திரன் நாயை ஏற விடாமல் தடுத்தான்.

"அப்படி என்றால் சொர்க்கத்தில் எனக்கும் இடமில்லை". என்று தர்ம புத்திரன் நாயை விட்டுச் செல்ல மறுத்து விட்டான்.

தர்மத்தை என்றும் புறக்கணிக்காத தர்மனைச் சோதிக்கவே நாயாக வந்த தர்மதேவதை தன் மகனின் மன உறுதியைக் கண்டு சந்தோஷத்துடன் மறைந்தது.

தர்மமே மனிதனுக்கு பாதுகாப்பு. அதுவே என்றும் அவனுக்குத் துணை என்பதற்கு ஒரு உதாரணமாய் இந்தக் கதை வியாசரால் அமைக்கப்பட்டிருப்பதாக, ராஜாஜி தனது 'வியாசர் விருந்து' என்ற நூலில் சொல்லியிருக்கிறார்.

தர்ம புத்திரன் இந்திரனோடு சென்றான். அங்கு அவன் முதலில் துரியோதனனைக் கண்டான். துரியோதனன் சூரிய தேஜஸ்ஸோடு அழகிய ஆசனத்தில் அமர்ந்திருப்பதையும், அவனைச் சுற்றி வீரலக்ஷ்மியும் தேவர்களும் நிற்பதைக் கண்டான். பின், தர்மபுத்திரன் அங்கிருந்தவர்களிடம், "பேராசை கொண்டவனும், குரூர எண்ணங்களைக் கொண்டவனுமான இந்த துரியோதனன் இருக்குமிடத்தில் நான் இருக்க விரும்பவில்லை. இவனால் நாங்கள் அடைந்த இன்னல்கள் எவ்வளவோ! பட்ட கஷ்டங்களாலும் நேர்ந்த அவமானங்களாலும் எங்களது தீராத பகைக்குக் காரணமாகி விட்ட துரியோதனனைப் பார்க்கவும் எனக்குப் பிடிக்கவில்லை. என் தம்பிகளும் திரௌபதியும் எங்கே? அவர்களோடு இருக்கவே நான் விரும்புகிறேன்!" என்றான்.

---

குமாரி டி. ஆர். மேகலை - செங்கல்பட்டு.

---

திரிகால ஞானியான நாரதர் சிரித்தபடியே தர்ம புத்திரனைப் பார்த்து, "பூவுலகக் கோமானே! இது இந்திரலோகம். பூவுலகம் இல்லை. இங்கு விருப்பு வெறுப்பு என்பது எதுவும் இல்லை. துரியோதனன் வீரன் அல்லவா? க்ஷத்திரிய தர்மத்தின்படி அவன் வீர சொர்க்கத்தை அடைந்து அனுபவிக்கிறான். தர்ம புத்திரனே! நடந்து போனவைகளையெல்லாம் மனதில் வைத்துக் கொண்டு நீ துரியோதனனை நிந்தித்தல் தகாது. மானிட தேகத்தோடு நீ தேவலோகம் வந்திருப்பதால் உனக்கு தவறான எண்ணங்கள் உண்டாகிறது. அவற்றை அகற்று. நீ நலம் பெறுவாய்." என்றார்.

"சுவாமி! தர்மத்தையே அறியாதவன் அல்லவா இந்த துரியோதனன். நலனை நினைத்தவர்களுக்கும் கூட அல்லவா அவன் தீமை செய்

(35-ம் பக்கம் பார்க்க)

# திருவேங்கடநாதா!

"இராமசந்திரக் கவிராயர் என்பவர் சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு நகைச்சுவைப்புலவர். அவர் தெலுங்கைத் தாய் மொழியாகக் கொண்டவர். ஆங்கிலம் அறிந்தவர். ஆங்கிலப் பெருமக்கள் சிலருக்குத் தமிழ் கற்பித்தவர்.

தமிழ்ச் சொற்கள் சிலவற்றைப்பலவாறு பிரித்துப் பொருள் கூறிப் பாடுவதில் அவர் வல்லவர்.

திருவேங்கடநாதா என்றால் 'திருவேங்கடமலையில் வாழும் தலைவனான இறைவனே' என்றுதான் பொருள்! ஆனால் கவிராயர் அந்தச் சொல்லை ஐந்து பிரிவுகளாகப்பிரித்துப்பொருள் கூறி ஒரு பாடலைப் பாடியிருக்கிறார்.

"நான் திருவேங்கட நாதன் என்னும் பெயருடைய வள்ளலிடம் சென்றேன். அவன் என்னை நோக்கி ஐந்து கேள்விகளைக் கேட்டான். அவற்றிற்கு நான் விடையளிக்கவில்லை. அவனுடைய பெயரை மட்டுமே சொன்னேன். அந்தப் பெயரிலேயே அவன் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் விடைகள் இருப்பதை அறிந்து மகிழ்ந்து அவன் எனக்குப் பொற் காசுகளை வழங்கினான்." — என்கிறார் கவிராயர்.

திருவேங்கடநாதன் என்னும் அந்த வள்ளல், புலவரிடம் கேட்ட ஐந்து கேள்விகளாகப் புலவர் சொல்பவை இவை; 1. என்னிடம் வந்து நிற்கும் இரவலனே! உன்னிடம் இல்லாதது என்ன? 2. உன் உள்ளம் எப்படி இருக்கிறது? 3. உன் உணவுக்கு நீ என்ன செய்கிறாய்? 4. உன்னிடம் சுவையற்றுப்போய் இருப்பது எது? 5. நீ என்னிடம் கேட்கத் தக்கது தான் என்ன?

அந்த ஐந்து கேள்விகளுக்குப் புலவர் சொல்கின்ற விடைகள் இவை :

1. என்னிடம் இல்லாதது செல்வம். 2. என் உள்ளம் வறுமையால் நொந்து. வெந்து கொண்டிருக்கிறது. 3. நான் கடன் வாங்கித் தான் காலம் தள்ளி வருகிறேன். 4. என்னிடம் சுவையற்றுப் போயிருப்பது என் நாக்குதான். 5. நான் உன்னிடம் கேட்கத் தக்கது பொருள்கொடு என்பதுதான்!

இந்த விடைகள் திருவேங்கடநாதா என்னும் சொல்லில் எப்படி அமைந்திருக்கிறது? செல்வத்தைக் குறிக்கும் சொல் திரு என்பது. 2. வேகிறது என்னும் பொருள் தருவது 'வேம்' என்னும் சொல். 3. உணவுக்கெனப் பிறரிடம் வாங்குவது கடன் தான். 4. சுவையற்றுப்போய் இருப்பது 'நா! 5. வறுமை நீங்க கேட்கத் தக்கது (பொருள்) தா!'

திரு × வேம் × கடன் × நா × தா எனப் பிரித்துப் பொருள் கொண்டு நகைச் சுவையாக அவர் பாடியிருக்கும் பாடல் இதுதான்.

இரவலனே! உனக்(கு) இல்லாத(து)
என்ன? இதயம் என்ன?
பரவுண(வு) ஏது? சுவையற்ற(து)
என்ன? சொற்பான்மை என்ன?
தரவுரை செய்திடவென்றான்.
அதற்கொன்றும் சாற்றிலன் யான்
வரதிருவேங்கடநாதா! என்றேன்
பொன் வழங்கினனே;

தமிழ்ச்சொற்கள் சிலவற்றிலுள்ள எழுத்துகளைக் கூட்டியும் குறைத்தும் பொருள் கூறிப் பாடுவதிலும் அவர் வல்லவர் என்பதற்குச் சான்றாக ஒரு பாடல்.

தெளிய சிங்கன் என்பவன் செய்த தவத்தால் தோன்றிய மகனான சீதாராமன் என்னும் கொடையுள்ளம் கொண்ட வள்ளலிடம் சென்று பரிசில் பெறப்பாடுகிறார் புலவர். எப்படி?

"அத்திரம், வேலாவலயம், இராசி ஒன்று, ஆகியவற்றைக் குறிக்கும் மூன்று பெயர்களில் இடையே உள்ள எழுத்துகளால் நான் மிகவும் துன்பப் பட்டு உன்னை வந்து அடைந்திருக்கிறேன். இந்தத் துன்பத்தை அகற்ற வேண்டுகிறேன்"—என்கிறார்.

அத்திரம் என்றால் அம்பு, அம்பைக் குறிக்கும் மற்றொரு சொல் சுகம். வேலை, வலயம் என்பன இந்த உலகத்தைக் சூழ்ந்திருக்கும் பெரு நீர்ப்பரப்பைக் குறிப்பன. அந்தப் பெருநீர்ப் பரப்பைக் குறிக்கும் பெரு நீர்ப்பரப்பைக் குறிக்கும் சொல் கடல். பன்னிரண்டு இராசிகளில் ஒன்றைக் குறிக்கும் சொல் கன்னி. இந்த மூன்று சொற்களுக்கும் இடையே உள்ள எழுத்துகளை எடுத்துச் சேர்த்துப் படித்தால் என்ன பொருள் வருகிறதோ, அதனால் நான் துன்பம் அடைந்து வந்திருக்கிறேன் என்கிறார். அந்த மூன்று எழுத்துகள் க, ட, ன் என்பன. கடன் தொல்லை மிகுதியால் நடுக்கமடைந்து உன்னிடம் வந்திருக்கின்றேன் என்கிறார்.

---

திரு. நீ. தங்கவேலன்—வேலூர்.

---

அவர் யாரிடம் வந்திருக்கிறார்? வள்ளலிடம் வந்திருக்கிறார். அந்த வள்ளல் எப்படிப்பட்டவன்? இராமனைப் பணிந்து போற்றுபவன். இராமன் எத்தகையவன்? மேற்சொன்ன சுகம், கடல், கன்னி என்னும் மூன்று சொற்களில் இடையே உள்ள எழுத்துகளை நீக்கிவிட்டால் வருகின்ற சொற்களில் ஒன்றைப் பத்தாகப் பெற்றிருந்தவனைக் கொன்றவன். சுகம் என்பதில் இடை எழுத்தை நீக்க வருவது கம். கம் என்றால் தலை. தலைபத்து உடையவன் இராவணன். இராவணனைக் கொன்றவன் இராமன்!

அம்மூன்று சொற்களில் இன்னொரு சொல் கடல். அதிலுள்ள இடை எழுத்தை நீக்க வருவது கல். கல்லைப் பெண் ஆக்கியவன், கல்லாய்ச் சமைந்திருந்த அகலிகையை உயிர்பெறச் செய்தவன் இராமன்.

மூன்றுவது சொல் கன்னி என்னும் சொல்லில் இடை எழுத்தை நீக்க வருவது கனி. காட்டில் சபரி என்னும் மூதாட்டி, தான் சுவைத்துப்பார்த்து இனிப்பாக இருந்த கனிகளைக் கொடுக்க அவற்றை வாங்கி உண்டவன் இராமன்.

"அப்படிப்பட்ட இராமனைப் பணிந்து போற்றும் சிறந்தவனே! தெளிய சிங்கன் தவத்தால் பிறந்த சீத்தாராம பிரபல தியாகவானே!" என்று அந்த வள்ளலை விளித்துப் பாடுகிறுர்.

" அந்திரம் வேலாவலயம் இராசி
ஒன்றிற்(கு)
அமைந்தபெயர் மூன்றினிடை
அக்கரத்தால்
மெத்த நடுக்குற்(று) உனைவந்(து)
அடைந்தேன் இந்த
விதனம் அகற்றிடு! மற்றை
எழுத்து ஓராறில்
பத்துடையானைத் தடிந்து,
பெண்ணுய்ச் செய்து,
பரிவின் நுகர்வோன் இருதாள்
பணிந்து போற்றும்
சித்தசனே! தெளியசிங்கன்
தவத்திற் றேன்றும்
சீதாராமப் பிரபல தியாக வானே!"

பாராட்டிக் கூறும் சொற்களை பழிச் சொற்களாகக் கொள்ளவும் இடம் இருக்கிறது என்று காட்டும் வகையில் ஒரு நகைச் சுவைப்பாடல்:

நான் ஒரு செல்வனிடம் பரிசில் பெறச் சென்றேன். என்னைக் கண்டதும் 'வாருங்கள்' என்று அவன் வரவேற்று "நீங்கள் யாரோ தெரியவில்லையே!" என்றுன். "நான் ஒரு புலவன்" என்று சொன்னேன். உடனே மோசம் வந்து விட்டது போல் வாய் குழற, உடல் நடுங்க, "நீர் என்ன வேலையாக என்னிடம் வந்திருக்கிறீரோ?" என்று வினவினுன். "நான் பரிசில் பெறவந்திருக்கிறேன்" என்பதைச் சொல்லாமல் அவனைப் பாராட்டிப் புகழத் தொடங்கினேன். "சிறப்புப் பொருந்திய காமதேனுவே! கற்பகத் தருவே! சிந்தாமணியே! சொன்ன சொல்லைக் காப்பாற்றுவதில் அரிச்சந்திரனே" என்று மட்டும்தான் சொன்னேன். அதற்குள் அவன் சினம் கொண்டவனுய்க் கண்கள் சிவக்கப் பேசினுன். "யாரைப் பார்த்து ஐயா, நீர், மாடு என்றும், மரம் என்றும், கல் என்றும் கூறுகிறீர்! காமதேனு என்பது என்ன? ஒரு மாடு தானே! கற்பகத்தரு என்பது என்ன? ஒரு மரம் தானே! சிந்தாமணி என்பது என்ன? ஒரு கல் தானே! அது மட்டுமா? என்னை அரிச்சந்திரன் என்று வேறு பெரிய பொய் சொல்கிறீரே! அரிசந்திரனைப்போல் நான் யாரிடம் போய் அடிமையாக இருந்தேன்? யாரிடம் என் மனைவியை விற்றேன்? என்மீது இவ்வாறு வசை பாடுவது தகுமா?" என்று கேட்டான். இத்தகைய கொடியவர்களைப் பாடி மனம் நொந்து முடிவில் உன்னிடம் வந்திருக்கிறேன். பொது மன்றத்தின் நடுவிலே நின்று நடம்புரிகின்ற தென்தில்லையில் வாழும் நடராசப்பெருமானே!" என்று பாடுகிறுர் புலவர்.

வாரும்நீர் யாரென்ன! வித்துவான்
என்னலும்
அதிமோசம் வந்த தென்றே
வாய்குழறி மெய்நடுக்குற்று, நீர்
வந்த காரியம் ஏதெனச்
சீருலாவிய காமதேனுவே! தாருவே
சிந்தாமணிக்கு நிகரே!
செப்பு வசனத்(து) அரிச்சந்திரனே
ஏன்னலும்
சினந்(து) இருகணும் சிவந்தே
யாரை நீ மாடு, கல், மரம் என்று
சொன்னதும்
அலால் அரிச்சந்திரனென்றே
அடாத பொய் சொன்னியே! யார்க்(கு)
அடிமையாகினேன்?
யார்கையில் பெண்டு விற்றேன்
தீருமோ இந்தவசை? என்றுரைசெய்
வெகுகொடிய
தீயரைப் பாடி நொந்தேன்!
திருமன்றுள் நடுநின்று நடம்
ஒன்று புரிகின்ற
தென்தில்லை நடராசனே!

இவ்வாறெல்லாம் தமிழ்ச் சொற்களை வைத்துக் கொண்டு விளையாடி நகைச்சுவை தோன்ற அழகாகப் பல பாடல்களைப்பாடியிருப்பவர் இராமச்சந்திரக் கவிராயர். ★

# விசிஷ்டாத்வைதம்-ஒரு விளக்கம்

வேத காலம் என்பது மீகப் புராதனமான காலமாகும். அந்த வேத கால கலாசாரங்கள் பல ஆயிரக் கணக்கான வருஷங்களில் பல மாறுபாடுகளை அடைந்த பிறகு இதிகாச காலமாகிற ராமாயண மகாபாரத காலம் தோன்றிற்று. இந்த இதிகாச காலத்திற்குப் பல ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்குப் பிறகுதான் புத்த மதமும் ஜைன மதமும் தோன்றின. யஜுர் வேதத்தில் சொல்லப்பட்ட யாகங்களில் 'ஹவிர்' பாகங்களாகப் பல உயிர்களைப் பலி கொடுப்பதை எதிர்த்து, அஹிம்ஸையைச் சிறந்த தர்மமாகக் கொண்டு புத்த ஜைன மதங்கள் வேதக் கருத்துக்களுக்குப் புறம்பாக, முன் பிறவியில் செய்த பாவ புண்ணியங்களை

'பூரம்' சத்தியமூர்த்தி-சென்னை.

மறு பிறவியில் நேரடியாகப் பலனைத் தருகின்றன என்று 'நிரீச்வர'வாதம் செய்தன. வேதத்தில் சொல்லப் பட்ட ஆதி பரம்பொருளாகிற பிரம்மத்தையும், அதன் தன்மையையும் பற்றி இவை பேசவில்லை. ஆனாலும் யாகங்கள் செய்வதன் மூலம்தான் மனிதகுலம் உஜ்ஜீவிக்க முடியும் என்கிற தவறான கருத்துக்கள் பரவியிருந்த காலத்தில் புத்த மதத்தின் அஹிம்சைக் கொள்கைகள் மக்களைக் கவர்ந்தன. ஏறத்தாழ அறுநூறு ஆண்டுகள் புத்த ஜைன மதங்கள் தழைத்தோங்கி இந்து மதமாகிற 'சநாதன தர்மம்' நசிக்கத் தொடங்கிற்று. பிறகு ஏழாம் நூற்றாண்டில் ஆதிசங்கரர் அவதரித்தார். அவர் வேதங்களின் கருத்துக்களை ஒரு விஞ்ஞான ரீதியில் விளக்கி 'அத்வைதம்' என்கிற வைதிக மதத்தை ஸ்தாபிதம் செய்து, ஸநாதன தர்மத்திற்கு உயிர் ஊட்டினார். அவர் இந்த நாடு முழுவதும் பாத யாத்திரை செய்து பல புத்த ஜைன மடாதிபதிகளை வாதில் வென்று வெற்றிக் கொடி நாட்டினார். கடைசியில் காஷ்மீரத்தில் இருந்த 'ஸர்வக்ஞ பீட'மாகிற சரஸ்வதி பீடத்தில் அத்வைத மதத்தை நிரூபணம் செய்து நாட்டின் பல்வேறு இடங்களில் பீடங்களை நிறுவினார்.

'அத்வைதம்' வேதத்தில் சொன்னபடி ஆதி பரம்பொருளாகிற பரப்ரஹ்மம் ஒன்றே என்றும், ஜீவாத்மா மோக்ஷத்தை அடைகிற நிலையில் பரமாத்மாவிடம் இரண்டறக் கலந்து விடுகிறது என்றும் அந்த நிலையில் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒரே தன்மையை உடையது என்றும் கூறிற்று. மேலும் பிரம்மம் மாயையினால் இந்தப் பிரபஞ்சமாய் வெளிப்படுகிறது என்றும், அது 'நிர்க்குணப் பிரம்மம்' என்றும் சொல்லிற்று. ஜீவாத்மா பரமாத்மாவுடன் கலந்து பிறவிப் பயனைப் பெறுவதற்கு பகவத்கீதையில் சொல்லப்பட்ட ஞான மார்க்கமே சிறந்தது என்றும் சொல்லிற்று. இந்த அத்வைதக் கருத்துக்கள் தழைத்தவுடன் புத்த ஜைன மதங்கள் இந்த நாட்டில் மறைந்தன.

ஆதி சங்கரர் அவதரித்து முந்நூறு ஆண்டுகளுக்குப் பிறகு அத்வைதக் கருத்துக்களையும் மக்கள் தவறாகப் புரிந்துகொண்டதன் விளைவாகப் பல தீமைகள் விளைந்தன. புத்த பிக்ஷுக்களுக்குப் பிறகு அத்வைத சந்நியாசிகள் தோன்றினார்கள். இள வயதிலேயே சந்நியாசம் பெற்று ஞான மார்க்கத்தைப் பின்பற்றினார்கள். ஜாதி பேதங்கள் தலைதூக்கின. இந்நிலையில்தான் ஸ்ரீராமாநுஜர் தோன்றி அத்வைத மதத்திற்கு அநுபந்தமாக 'விசிஷ்டாத்வைதம்' என்கிற மதத்தை ஸ்தாபிதம் செய்தார். இது வேதம், உபநிஷதம், பிரம்மசூத்திரம், பகவத்கீதை ஆகிய நூல்களில் சொல்லப்பட்ட கருத்துக்களை ஆராய்ந்து எடுத்து பாமரர்களும் கடைப்பிடிக்கும் வகையில் இறைவனை அடைவதற்கு பக்தி மார்க்கமே சிறந்த மார்க்கம் என்று ஸ்தாபித்தார்.

அத்வைதத்தில் சொல்லப்பட்ட கருத்துக்களாவன...

1) **एकमेव अद्वितीयं ब्रह्म** 2) **जीवो ब्रह्मैव न अपरः** 3) **मायान्तु प्रकृतिं विद्यात्** 4) **तत् त्वमसि** 5) **ब्रह्म सत्यं लोकं मिथ्या ।**

ஸ்ரீ ராமாநுஜர் முதலில் சொல்லப்பட்ட இரண்டு கருத்துக்களை அப்படியே ஏற்றுக் கொண்டார். இந்த உலகை இயக்குகிற பிரம்மம் ஒன்றே என்றும் ஜீவன்கள் யாவும் அந்த பிரம்மம் குணங்களற்றதாய் நிர்க்குணப் பிரம்மமாய் இருக்க முடியாது என்பதை வேத உபநிஷத வாக்கியங்களிலிருந்தும், சாஸ்திரங்களிலிருந்தும் நிரூபித்தார். பிரம்மத்திற்கு ஸ்வரூபம் நாம் காண்கிற பூவுலகமும், அதனுள் காணும் வஸ்துக்களும். பல கோடிக்கணக்கான நக்ஷத்திரங்கள், கிரகங்கள், அதில் அடங்கிய சகல வஸ்துக்கள் யாவுமே அந்த பிரம்மத்தின் சரீரமே..! அதை இயக்கக்கூடிய இயங்கு சக்திதான் பிரம்மம். சங்கரர் இந்த பூவுலகங்கள் யாவும் பிரம்மத்தின் உருவெளித் தோற்றம்; இது மாயையால் ஏற்படுவது; இருளில் கிடக்கும் கயிறு பாம்பாகத் தெரிவது போல என்று சொல்வதை நாம் கவனிக்க வேண்டும்.

ஸ்ரீ ராமாநுஜர், மூலப்ரகிருதி

மாயையல்ல. இது பிரம்மத்தின் சரீரம்; அந்த பிரம்மம் எவ்வாறு ஸத்யமானதோ அதே போல இந்த பூவுலகும் ஸத்யமானதே! பிரம்மம் தானே இந்த பூவுலகங்களாகப் பரிணமித்து மாறிவிட்டது. இந்தப் பரிணும மாற்றம் பால் பிறைகுத்திய வுடன் எப்படித் தயிராக மாறி விடு கிறதோ அவ்வாறே நிகழ்ந்தது. பிரம்மம் ஒரு நாள் மனதால் ஸ்மரித்து தானே இந்த பூவுலகங் களாக, இவைகளையே சரீரமாக ஆக்கிக்கொண்டது. உபநிஷதத்தின் விளக்கமான ஸத்யம், ஞானம், ஆனந்தம் ஆகிய மூன்றும் - அதாவது ஸத்யமாக இருக்கும் தன்மை, ஞானத்தால் அறியக்கூடியதாய் இருக்கும் தன்மை — ஆனந்தமாய் இருக்கும் தன்மை. அந்த பிரம்மத்தின் குணங்களை தவிர அவைகளை ஸ்வரூபமாகச் சொல்வது பொருத்தமாகாது. பிரம்மத்திற்கு ஸ்வரூப லக்ஷணம் இந்த பூவுலகங்களே! இந்த உலகிலுள்ள ஒவ்வொரு வஸ்துவிலும், உட்புகுந்து வியாபித்து விரவிப் பரவி இயக்கிக் கொண்டிருப்பதால் **विश् प्रवेशने इति विष्णु** என்றும் **विष्लृ व्याप्तौ इति विष्णु** என்றும் அவன் **விஷ்ணுவாகிறன்.** எல்லா ஜீவாத்மாக்களினுள்ளும் உள்ளொளிர்ந்து இயங்கிக் கொண்டிருப்பதால் இந்த ஜீவாத்மாக்களும் மற்றும் எல்லா சேதன அசேதனப் பொருட்கள் யாவும் அந்த பிரம்மமாகிற பரம் பொருளின் சரீரமாகின்றன. அவன் ஒருவனே ஆத்மாவாகவும், நாம் யாவருமே சரீரமாகவும் ஆகிறோம். சரீரம் எவ்வாறு ஆத்மாவையே சார்ந்து நிற்கிறதோ அதே நிலையில் ஜீவாத்மா அந்தப் பரமாத்மாவையே சார்ந்து சரணுகதி அடைவதே இறைவனை அடைய ஒரே வழியாகும்! இதை, 'நெறியும் அவனே! வாசலும் அவனே!' என்று 'நெறி வாசல் தானேயாய்' என்கிற ஆழ்வார் திருவாக்கினுல் நிரூபிக்கிறர் ராமாநுஜர்.

அந்த எம்பெருமான் சரணுகத வத்ஸலன்; பரம காருணிகன்; அவன் பக்திக்குக் கட்டுப்படுகிறவன்; ஆகவே பக்தி செலுத்தி இறைவனைச் சரணுகதி அடைவது ஜீவாத்மாக்களின் கடமையாகிறது என்கிறர் ஸ்ரீ ராமாநுஜர்.

இவ்வாறு சரணுகதி அடைய, ஞானம் அவசியமில்லை. ஆசார அநுஷ்டானங்களும் அவசியமில்லை. பக்தியின் மூலமாக இறைவன் மிக எளிதில் கிட்டுகிறுன் என்று ஒரு புதிய மிக சுலபமான வழியை அவர் காட்டுகிறர். ஞானமே இல்லாத பாமரர்களும் பாகவதர்களாகி எம்பெருமானைச் சேர்வதற்கு சரணுகதி ஒரு வரப்பிரஸாதமாயிற்று.

பிரம்மமாகிற ஆதிபரம்பொருள் விஷ்ணுவாய் அநேக கல்யாண குணங்களை உடையதாய் கண்ணுக்கு இனியனுய்க் காட்சி தருகிறுன்! எல்லையில்லாத ஞானம், பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ், ஸௌசீல்யம் வாத்ஸல்யம், ஆர்தவம், ஆர்ஜவம், ஸௌஹார்தம், ஸாம்யம், அபார காருண்யம், மாதுர்யம், காம்பீர்யம், ஔதார்யம், சாதுர்யம், ஸ்தைர்யம், தைர்யம், ஸௌர்யம், பராக்ரமம் போன்ற பல குணநலன்களைக் கொண்ட அந்த விஷ்ணுவே ஆதிபரம்பொருள்! அவன் ஒருவனே சரண்யன்; சரணுகதி செய்யத் தகுந்தவன்; அவன் பரம ஸௌலப்யன். மிக எளிதில் அடையக்கூடியவன். பறவைகளுக்கும், மிருகங்களுக்கும் படித்தவர்களுக்கும், பாமரர்களுக்கும் மோக்ஷம் தந்தருள்கிற கருணைக் கடல்!

அந்த எம்பெருமானைச் சரணுகதி அடைந்த ஜீவாத்மா இக வாழ்வை முடித்துக்கொண்டு பரமாத்மாவை அடைகின்ற நிலையில் அது பரமாத்மாவுடன் இரண்டறக் கலந்து விடுகிறது என்பதும் அந்த நிலையில் ஜீவாத்மா, பரமாத்மாவின் எல்லாத் தன்மைகளையும் பெற்று விடுகிறது என்பதும் உண்மையே! ஆனுல் அந்த நிலையில் அதை ஒன்று என்று சொல்ல முடியாது. அது இரண்டுதான்! ஜீவாத்மா, பரமாத்மாவைப்போலவே அதே தன்மைகளுடன் பரமாத்மாவினிடத்தே ஐக்கியமாகி விடுகிறதே தவிர பரமாத்மாவாகவே அது ஆவதில்லை என்கிறர் இராமாநுஜர்.

இதை அவர் 'பிரமரகீட' தத்துவம் அதாவது 'வண்டு புழு' தத்துவம் மூலமாக அவர் விளக்குகிறர். பரமாத்மாவாகிற வண்டு ஜீவாத்மாவாகிற ஒரு புழுவைக் கொணர்ந்து கூடு கட்டுகிறது. புழு வளர்ந்து வண்டாக மாறிப் பறக்கிறது. அந்த நிலையில் புழு பரமாத்மாவாகிற வண்டாகவே ஆவதில்லையல்லவா! அந்த வண்டு வேறு தான்! இந்த வண்டு வேறு தான் அல்லவா?

எம்பெருமானின் தன்மை அளப்பரியது. அது வாக்கிற்கும் மனதுக்கும் எட்டாத 'அவாங்மானஸ கோசர'மானது.

ஸ்ரீ ராமாநுஜரின் விசிஷ்டாத்வைதமே சகல ஜீவ ராசிகளையும் உஜ்ஜீவிக்கிறது.

ஆதிசங்கரர் விஞ்ஞான ரீதியான விளக்கம் தந்தார். இராமாநுஜர் அதை நடைமுறை வாழ்க்கைக்கு ஏற்ற வகையில் விரிவுரை எழுதி விசிஷ்டாத்வைதமாக்கினுர்!



# த்வயத்தின் பொருள் சுருக்கம்

த்வயத்திற்குப் பத்துவித அர்த்தங்களுண்டு என பூர்வாவாசாரியர்கள் கூறியுள்ளனர். ஸ்வாமி வேதாந்த தேசிகரும், "த்வயச் சுருக்கு" என்னும் தம் ப்ரபந்தத்தில் முதல் பாசுரத்தின் பின்பகுதியில் கீழ்கண்டவிதம் கூறுகிருர்.

" தன்னுரை மிக்கதனமிதெனத் தந்த வேதகத்தில்
துன்னு பொருள்கள் பத்தும் தொலையாநிதியாகின்றனவே"

நாராயண பதத்திற்கு விசிஷ்டமான அநேக குணங்களுண்டு என்கிருர் லோகாசாரியர், த்வயப்ரகரணத்தில் 22ம் சூத்திரத்தில். அவை யாவன: வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், சௌசீல்யம், சௌலப்யம், ஞானம், ஸக்தி என வரும் எம்பெருமானுடைய 16 வித குணங்கள் பேசப்படுகின்றன். அவைகளில் முக்யமான 12 குணங்கள் மிகச் சுருக்கமாக விளக்கப்படுகின்றன.



குணகளாவன:

1. சௌலப்யம், 2. சௌசீல்யம், 3. வாத்ஸல்யம், 4. ஸ்வாமித்வம், 5. காருண்யத்வம், 6. சௌர்யம்-பராக்ரமம் 7. க்ஷமை-பொறுமை, 8. ஸர்வஞ்த்வம், 9. ஸத்ய ஸங்கல்ப்த்வம், 10. சரணுகதவத்ஸ்த்வம், 11. உதாரத்வம், 12. ஸ்வதந்த்ரத்வம் முதலியன.

சௌலப்யம்:

தன்னை அடைய விரும்புகிறவர்கள், தன்னை சுலபமாக அடையும்படி இருத்தல்.

சௌசில்யம்:

எம்பெருமான் மிக உயர்ந்த நிலையில் இருந்தாலும் சாமான்யர்களுடனும் இனம் பாராமல் ப்ரீதியாய் இருத்தல். இங்கு ஸ்ரீமத் ராமாயணத்தில் வேடுவனுகிய குகனேடும், குரங்கினத்தை சேர்ந்த அனுமன் சுக்ரீ

திரு. டி. கேசவ அய்யங்கார்—அல்லூர்.

வனேடும், அரக்களாகிய விபீஷணனுடனும் சக்யம் செய்தபடி, திருமங்கையாழ்வாரும் ஈஸ்வரனுடைய சௌலப்ய, சௌசீல்ய குண விசேஷங்களை தமது பெரிய திருமொழி 8ல் 5ம்பத்தில், முதல், இரண்டாவது பாசுரங்களில் வெளியிட்டுள்ளார். (ஏழை ஏதலன், கீழ்மகனென்னுது மற்றும் வாதமாமாகன் மற்கடம் விலங்கு ஆகிய பாசுரங்கள்.)

வாத்ஸல்யம்:

பசுவானது தன் கன்றினிடத்தில் உள்ள தோஷங்களைப் பார்க்காமல், கன்றைத் தன் நாவினுல் நக்கிக் கொடுத்தும், பாலைக் கொடுத்தும், அதற்கு ஏதாவது சிறு ஆபத்து ஏற்



ஸ்ரீ வீரராகவசுவாமி கோயில் - உற்சவர் தன்தேவியருடன் - திருவள்ளூர்.
திரு. ஆர். ஜி. பாபுஜி.

பட்டாலும் கொம்பினாலும், குளம்பி னாலும், எதிரியைத் தாககிக் கன்றை பாதுகாப்பது போல், பகவானும் நம்மடமுள்ள தோஷங்களைப் பாராமல் குணங்களை எடுத்துக் கொள்வதாகும்.

ஸ்வாமித்வம் :

ஸர்வலோகத்தையும், சேதனா சேதனங்களையும் தன்னுள் வைத் திருத்தல்.

காருண்யத்வம் :

நான் ஒரு ப்ரதிப்ரயோஜனத்தை யும் எதிர்பாராமல், ஆஸ்ரயித்தவர் களுடைய துக்கத்தைப் போக்கு தலும், அபராதிகளையும் மன்னித்து தன்னடிச் சோதியில் சேர்த்துக் கொள்வது.

சௌர்யம்-பராக்ரமம் :

விரோதிகள் அனைவரையும் அழிக் கும் வல்லமை படைத்திருத்தல்.

க்ஷமை-பொறுமை :

மஹா அபராதிகளையும் மன்னிக் கும் குணம் உடையவன். மகா அப ராதியான காகாசுரன், கொல்லத்த குந்தவனாய் இருந்த போதிலும், மூன்று உலகங்களிலும் ரக்ஷிக்கப்படா தவனாய், 'தமேவ சரணம் கத:' என்று சக்ரவர்த்தி திருமகன் திருவடி களில் சரணாகதியாக விழுந்தபடி யாலும், தவிர சீதாப்பிராட்டியும் பக்கத்தில் இருந்து கருணையுடன் நோக்கியதால், 'க்ருபயா பர்ய பாலயத்' என்றபடி அவனைக் கொல் லாமல் ஒரு கண்ணழிவை மட்டும் செய்தான். இதையே ஸ்வாமி வேதாந்த தேசிகரும், தமது 'அமிரு தாசுவாதினி' என்ற தமிழ் ப்ரபந் தத்தில் 15ம் பாசுரத்தில், 'ஆகண்ட லன் மகனாகிய ஆவலிப்பேறிய ஓர் காகம் பிழைத்திடக் கண்ணழிவே செய்த காகுத்தனே' என்று அருளிச் செய்திருப்பதிலிருந்து தெரிய வரு கிறது. தவிர முமுக்ஷுப்படி ஆசிரியர் ஸ்ரீபிள்ளை லோகாசாரியர் முமுக்ஷுப் படியின் த்வயப்ரகரணத்தில் 19ம் சூத்திரத்தில் 'இவள் சந்நிதியாலே காகம் தலைப் பெற்றது. அது இல் லாமையாலே இராவணன் முடிந் தான்' என்று அருளியுள்ளார்.

ஸர்வஞ்த்வம் :

மூன்று காலங்களையும் அறிந்த வனாக இருத்தல்.

ஸத்யஸங்கல்பத்வம் :

எம்பெருமான் ஒரு காரியத்தை செய்ய நினைத்து முடித்து விட்டால், அதைத் தடுக்க யாராலும் முடியாது; நிறைவேற்றியே தீருவான் என்ப தாகும். இங்கு ஸ்ரீமத் இராமாயணம், சுந்தர காண்டம், 51ம் ஸர்க்கம், 45ம் ஸ்லோகம் 'ப்ரஹ்மா ஸ்வயம்பூச் சது ராநனோ வா' என்ற ஸ்லோகம் அனு ஸந்தேயம்.

சரணாகதஸ்தவம் :

தன்னை சரணமடைந்தவர்களை, அதுவும் ஒரே தடவை சரணம் என்று சொன்னாலும், சரணமடைந்தவர்களை கைவிடாதிருத்தல். 'மித்ரபாவேன ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சன' என்ற ஸ்ரீமத் இராமாயண ஸ்லோக மும், ஸ்ரீராமாயணம சரமஸ்லோகமா கிய 'சக்ருதேவ ப்ரபன்னாய' என்ற ஸ்லோகமும் அனுஸந்தேயம். தவிர கஜேந்த்ராக்ஷணமும், திரௌபதிக்கு புடவை சுரந்ததும் திருஷ்டாந்த களாகும்.

உதாரத்வம் :

ப்ரபத்தியாக சரணமடைந்தவர் களின் சிறுமையையும், தாம் கொடுக் கப் போகும் பலனின் பெருமையை யும் பார்க்காமல் இன்னும் அதிகம் பலன் தரவேணும் என்று இருக்கும் தன்மை.

ஸ்வதந்த்ரத்வம் :

யாருக்கும் கட்டுப்படாதவன் என் பது. பாக்கியுள்ள நான்கு குணங் களும், மேல் கூறப்பட்டுள்ள குணங் களில் அடங்கியிருப்பதால் விவரிக்கப் படவில்லை.

ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் என்பதை ஒரே பதமாக வைத்து பிராட்டியோடுகூடின நாராயண னுடைய திருவடிகள் தஞ்சம் என்றும், ஸ்ரீமந் நாராயண என்று பிரித்து, உன்னுடைய என்ற சொல்லையும் சேர்த்து ஸ்ரீமானான நாராயணனே உனது திருவடிகளே தஞ்சம் என்ப

தாகும். எம்பெருமானுடைய பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை என்ற ஐந்து நிலைகள் திவ்ய ப்ரபந்தங்களில் பேசப்பட்டிருந்தாலும் அர்ச்சாவதாரமே சிறந்தது என்பர் பெரியோர். மற்ற நான்கு நிலைகளிலும் எம்பெருமானையும் திவ்யமங்கள விக்ரஹத்தையும் புறக் கண்களால் கண்டு ஆனந்திக்க முடியாது. 'வேதங்களுக்கு எம்பெருமானின் பரத்வத்திலே நோக்கு, பாஞ்சராத்ரங்களுக்கு வ்யூஹத்திலே நோக்கு, இதிஹாச புராணங்களுக்கு விபவத்திலே நோக்கு, ஆழ்வார்களின் அருளிச் செயல்களுக்கு அர்ச்சையிலேயே நோக்கு'' என்று ஆசார்யஹ்ருதயத்தில் அருளிச் செய்யப்பட்டுள்ளது. சரணௌ என்பதினால் எம்பெருமானுக்கு திவ்யமங்களத் திருமேனி உண்டு என்பதையும் திருமேனியோடு கூடினவனாகவே அனுஸந்தானம் செய்ய வேணும் என்பதையும் காட்டும். ஸ்ரீமத் ராமாயணத்திலும், ஆழ்வார், ஆசார்யர்கள் படைப்புகளிலும் அருளிச் செயல்களிலும் ஸ்ரீ சூக்திகளிலும், எம்பெருமானுடைய திருவடிகளைத் தஞ்சமாக சரணமடைந்ததாகக் கூறப்பட்டுள்ளது. எம்பெருமானாரும் ஒரு பங்குனி உத்திர நாளிலே, தாயாருடன் கூடிய பெரிய பெருமாளை ஸ்ரீரங்கத்தில் சரணமடைந்ததாக கத்யத்ரயத்தின் மூலம் தெரிகிறது. பரமாசாரியரான ஸ்ரீ ஆளவந்தாரும் தாம் இயற்றிய ஸ்தோத்ர ரத்னத்தில் எம்பெருமானை பலவாறு சேவித்த பிறகு கீழ்வரும் 22ம் ஸ்லோகத்தால் எம்பெருமானின் திருவடிகளில் தஞ்சமாக சரணமடைந்ததாகக் கூறியுள்ளார்.

ந தர்மநிஷ்டோஸ்மி ந சாத்மவேதீ
ந பக்திமாந் த்வத்சரணாரவிந்தே!
அகிஞ்சநோऽநந்யகதிச் சரண்ய
த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே!!

என்று அருளிச் செய்துள்ளார். 'கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் முதலியவற்றில் தமக்கு ஒன்றும் இல்லை என்று சொல்லி, பகவானின் திருவடிகளையே உபாயமாகப் பற்றி, வேறு புகலற்றவனாய் சரணாகதி செய்கிறேன்' என்கிறார். ''நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்'' (திருவாய்மொழி 5-7-1, ''நின் கணும் பத்தனல்லேன்'' (திருமாலை 25ம் பாசுரம்) ''புகலொன்றில்லா வடியேன் உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே'' (திருவாய்மொழி 6-10-10) போன்ற ஆழ்வார்களின் அருளிச் செயல்களை அடியொற்றியே இந்த ஸ்லோகம் அமைந்துள்ளதைக் காணலாம். ஸ்வாமி வேதாந்த தேசிகரும் தான் பெருமாளை சரணாகதி செய்ததை அதிகாரஸங்ரஹம் 3ம் பாசுரத்திலும், அமிருதா சுவாதினி 31ம் பாசுரத்திலும் அடைககலப்பத்து என்ற ப்ரபந்தத்தின் 10ம் பாசுரத்திலும் தெளிவாகக் கூறியுள்ளார். சரணம் என்பது இஷ்டப் ப்ராப்திக்கும், அனிஷ்டப் நிவாரணத்திற்கும் தப்பாத உபாயமாக என்ற முமுக்ஷுப்படி த்வயப்ரகரணத்தின் 44ம் சூத்திரத்தில் உலகாசாரியர் அருளிச் செய்துள்ளார்.

சரணம் என்பது உபாயத்தைக் காட்டுகிறது. எம்பெருமானே சரணாகதியின் மூலம் உபேயமாகச் சொல்லுகிறது இந்த சரணம். அதனால் அடைபவனும், அடையப்படுபவனும் அவனே என்றாகிறது.

ப்ரபத்யே என்றால் பற்றுகிறேன் என்பது பொருள். இதை வார்த்தைகளினாலும், சரீரத்தினாலும் பற்றினாலும், பேறு பெறுவதற்கு ஆதாரமாயிருக்கிறது. ''ஞாநாந் மோக்ஷம்'' என்கிற படியாலும், பற்றுதல் அதாவது எம்பெருமானின் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றுவது அவசியமாகிறது. இங்கு இந்தப் பதம் சேதனர்களுக்கு இருக்க வேண்டிய முக்ய குணத்தை சொல்லுகிறதென்னலாம். அதாவது ப்ரபத்தியாகிற சரணாகதியை செய்த சேதனர்களுக்கு எம்பெருமான் நிச்சயமாகக் காப்பாற்றுவான் என்ற அசைக்க முடியாத நம்பிக்கை என்ற மஹாவிஸ்வாசமாகும். சரணாகதிக்கு அங்கமாகவும், லக்ஷணமாகவும் கீழ்வரும் ஸ்லோகம் கூறும்.

''ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப:
ப்ராதிகூல்யஸ்ய வர்ஜனம்!
ரக்ஷிஷ்யதீதி விஸ்வாஸோ
ததா கோப்த்ருத்வ வர்ணநம்!!
ஆத்ம நிக்ஷேப கார்ப்பண்யே
ஷட் விதா சரணாகதி:''

சரணாகதிக்கு லக்ஷணமாகவும் அங்கமாகவும் சொன்ன ஸ்லோகத்தின் பொருள் பகவானுக்கும், பாகவதர்களுக்கும், உகப்பாக இருக்கக் கூடிய கைங்கர்யங்களை செய்தும், எல்லா உயிர்களிடத்தும் பகவான் இருக்கிறார் என்பதை உணர்ந்து அன்பு காட்டி, பிறர்க்கு எந்தவிதத்திலும் ஹிம்சை செய்யாமல், அஹிம்சையைக் கடைப்பிடித்தும், பரோபகாரமாக வாழ்ந்து, பகவானிடம், சந்தேகத்திற்குத் துளி இடம் இல்லாமல் காப்பாற்றுவான் என்ற நம்பிக்கையோடு இருத்தல் என்பதாகும். நாம் தோஷங்களையும், சிறுமையை உடையவர்களாக இருந்தாலும், அவனுடைய மேன்மையான பெருங்குணத்தால், நம்மையும் நம் தோஷங்களையும் மன்னித்து ஏற்றுக் கொள்ளுகிறான் என்ற நம்பிக்கையும் தவிர ரக்ஷிக்க வேண்டும் என்று அவன் திருவடிகளை ப்ரார்த்திப்பதும் கடைசியாக தன்னையும் தன் ஆன்மாவையும், அவன் திருவடிகளே தஞ்சம் என்று சரணாகதி செய்தலுமாம்.

மேலே விவரிக்கப்பட்ட வகையின் சுருக்கத்தின்படி, த்வயத்தின் பூர்வ வாக்யம், சரணாகதியாகிற உபாயத்தை சொல்லுகிறது என்பதுதான் ஸாரமாகும்.

இனி த்வயத்தின், உத்தரவாக்யமாகிய, ''ஸ்ரீமதே நாராயணாய நம'' என்பதின் அர்த்தங்களின் சுருக்கத்தைக் காண்போம். ஸ்ரீமதே என்பதில் உள்ள ஸ்ரீ ஸப்தத்திற்கு,

(28-ம் பக்கம் பார்க்க)

# ஸ்ரீ ஆண்டாள் அருளும் திருப்பாவை

ஸ்ரீ ஹரி-சென்னை-71. ✳ சித்திரம் : சசி.

## மாதவனே! வைகுந்தனே!

"திருவுருவான மாமன் மகளே!... மிக உயர்ந்த இரத்தினங்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட மாளிகையில் சுற்றிலும் பாவை விளக்குகளும், குத்து விளக்குகளும் ஒளிர்விட்டுப் பிரகாசிக்கவும், அகில் - சந்தனம் - சாம்பிராணி புகை கமழவும், உறங்குவதற்கு உரிய உயர்ந்த மென்மையான படுக்கையில் உறங்கிக் கொண்டிருக்கும் மாமன் மகளே!

மணிகளால் ஆன கதவின் தாழ்ப்பாளைத் திறப்பாயாக, எழுந்து வந்து. அன்புள்ள மாமி! உங்கள் திருமகளை உடன் எழுப்புங்கள்... அடடே... இன்னுமா எழவில்லை! உங்கள் செல்வமகள், வாய் திறந்து பேசா ஊமையோ? எது கூறினும் காது கேளாதச் செவிடோ? அல்லது சோர்ந்துக் கிடக்கிறாளோ? எழுந்திராமைக்குக் காவல் கொண்டாளோ? அன்றி இப்பெருந்துயிலின் மந்திரத்தில் கட்டுப்பட்டுக் கட்டிலில் கிடக்கிறாளோ?

'கண்ணனாகத் திருவுருவெடுத்து அரும்பெரும் மாயச் செயல்களை புரிந்தவனே! தேவி லக்ஷ்மியின் நாயகனே! ஸ்ரீ வைகுண்டத்தில் திருவருள் புரியும் ஸ்ரீவைகுந்தனே!'—என்று நாங்கள், அவன் திருநாமம் பலமுறை சொல்லுகின்றோமே! மாமீ, 'மாமாயன், மாதவன்' என்று கூறி அவளை எழுப்பி விடுங்கள்' என்று ஸ்ரீ ஆண்டாள் தன் தோழியின் அருகே உள்ள மாமியிடம் விண்ணப்பிக்கின்றாள்.

"தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய,
தூபங் கமழத் துயிலணை மேல் கண்வளரும்
மாமான் மகளே! மணிக்கதவம் தாள் திறவாய்;
'மாமீர்' அவளை எழுப்பீரோ? உம்மகள்தான்
ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?
'மாமாயன், மாதவன், வைகுந்தன்' என்றென்று
நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய்."

'அந்த நங்கையர்கள் உன்னை அழைக்க, நீ உறங்குகிறாயே' என்று தன் மகளை வினவ, வெளியே நிற்கும் மங்கையர்கள், "மாமி அவளை எழுப்பீரோ... எழவில்லை என்றால் கண்ணே, மணியே, கற்பகமே என்று கூறுவது போல, 'கண்ணன், மணிவண்ணன், மாதவன், வைகுந்தன்' என்று கூறியாவது அவளை எழுப்புங்கள்' என்கிறார்கள். அப்படிச் சொல்லியும் அவள் திருப்பள்ளி எழுச்சிச் செய்யவில்லை. சற்றுக் கோபத்துடன், ஆத்திரத்துடன் வினவுகிறாள் மாமியை:

"என்ன உங்கள் மகள் ஊமையோ? செவிடோ? அனந்தலோ?" என்று. 'ஏமம்' என்பது காவல். தூக்கத்திற்கே காவலாக நின்றாளோ? அல்லது அந்தத் தூக்கம் அளித்த மந்திரத்தில்தான் கட்டுண்டாளோ?—என்று மேலும் வினவுகிறாள். பலன்? அவள் தூக்கத்தை விடுவதாக இல்லை.

மாமாயன் மிகவும் ஆச்சர்யமான குணங்களாலும் செயல்களாலும் உலக உயிர்களின் உள்ளத்தை வசீகரிப்பவன். தோழிகள், 'இருளும் பனியும், குளிரும் பொருட்படுத்தாமல் வீடுவீடாக அலைந்து அனைவரையும் எழுப்பிட, நீ மட்டும் உன் மாணிக்க மாளிகையில் சுற்றும் தீபம் சுடர்விட, தூபம் கமழ்ந்திட பஞ்சணையில் கண் வளர்கிறாயே' என்று ஆத்திரமும் அன்பும் பரிகாசமும் கலக்க, 'உன் பொறுப்பையும், கடமையையும், மறந்தாயோ' என்று வசைமாரி பொழியாமல் பொழிந்து எழுப்பும் ஸ்ரீ ஆண்டாள் திருவாக்கிலே இது ஓர் அருமையான பாசுரமாகும்.

" நீயும் நானும்இந் நேர்நிற்கில் மேல் மற்றோர்
நோயும் சார்கொடான் நெஞ்சமே சொன்னேன்
தாயும் தந்தையும் ஆய்இவ் வுலகினில்
வாயும் ஈசன் மணிவண்ணன் எந்தையே!"

என்று நம்மாழ்வார் பரவசமாகி இறைவனையே தியானிப்பது போல உயிர்கள் அனைத்தும் பரமனைத் தியானிக்க வேண்டும் என்று ஸ்ரீ ஆண்டாள் உரைக்கின்றாள். காமம், கோபம், ஆசை, துன்பம், துயரம் என்ற உறக்கங்களிலேயே உலக உயிர்கள் சதா சர்வகாலம் உறங்கிப் பொன்னான காலத்தை விரயமாக்கி விடுகின்றனர். இறைவனின் மணிக்கதவம் தாள் திறக்க அவன் நாமத்தையே தியானிக்க வேண்டும். இறைவனின்-ஸ்ரீ வைகுந்தனின் திருப்பாதக் கமலத்தாள் திறந்தால் உயிர்களுக்குத் துன்பம்-தொல்லை - துயரம் தான் ஏது? எனவே அனைவரும் ஆசை, பேராசை என்னும் தூக்கத்தை விட்டு பரமனின் புகழையே தியானிக்க வேண்டும்.

# ஸ்ரீமந் நாராயணனே!

"திருமாலின் திருநோன்பு நோற்று அந்த இன்ப சுவர்க்கத்தில், தன் இதயத்தில் ஸ்ரீ கண்ணனையே நிறுத்தி அதில் மூழ்கிப் பரவசமாய்த் திகழும் திருநிறைப் பெண் மணியே! எம் பாவையே! எம் தோழியே!

வந்து வாசற்கதவை திறவாத நீ, ஒரு மறுமொழியும் சொல்ல மாட்டாயோ? நறுமணங் கமழும் திருத்துழாயை அணிந்திருக்கும் ஸ்ரீமந் நாராயணன், நாமாகப் போற்றி நாமணக்கத் துதித்து வணங்கிட, நோன்புக்கு வேண்டிய பறையைத் தரக்கூடிய-அருளக்கூடிய புண்ணிய மூர்த்தி ஆவான்!

முன்னொரு காலத்தில், உயிர்களை ஈர்க்கும் எமனுடைய வாயில்—பிடியில் விழுந்த, தூக்கத்தில் கும்பகர்ணனும் உனக்குத் தோற்றுப் போய்—தன்னுடைய பெரிய தூக்கத்தை, உனக்குக் கொடுத்து விட்டானே? மிக அதிகச் சோம்பலைப் பெற்றவளே! தேடக்கிடைக்கா அரிய ஆபரணமாக எங்களுக்கு வாய்த்திருப்பவளே! தூக்கத்தை உதறித் தள்ளி விட்டு—தெளிவுடன் எழுந்து வந்து கதவைத் திறப்பாயாக!' என்று கடிந்து—இடித்து எழுப்புகிறாள் சூடிக் கொடுத்தச் சுடர்க் கொடியாள்.

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்!
மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்?
நாற்றத் துழாய்முடி நாராயணன் நம்மால்
போற்றப் பறைதரும் புண்ணியனால் பண்டொரு நாள்
கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்ப கரணனும்
தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ?
ஆற்ற அனந்தல் உடையாய்! அருங்கலமே!
தேற்றமாய் வந்து திறவேலோ ரெம்பாவாய்.

ஸ்ரீ ஆண்டாள் கனிவாகக் கூறிய மணிமொழி எல்லாம் காற்றோடுப் போயின. காதில் விழவில்லை—தூக்கத்தினால். 'ஊமையோ, செவிடோ, அனந்தலோ' என்று ஏசினாள். அப்பொழுதாவது 'விழிப்பாளோ' என்று. அவள் கூறிய 'வசை மொழி' யெல்லாம் தாலாட்டும் 'இசை மொழி'யாகக் கொண்டு மேலும் உறங்குவாள் ஆயினள். அவளது பொறுமையும் பொறுமையின் எல்லைக்கே சென்று விட்டதால் இன்னும் சற்றுக் கடிந்து கூறுகிறாள்: 'தூக்கத்தில் பெயர் பெற்றவன் கும்பகர்ணன். அவனே உன் தூக்கத்தைக் கண்டு அதனோடு வெற்றி பெற மாட்டோம் என அஞ்சி தன் தூக்கத்தையும் உனக்கே தந்து விட்டுச் சென்றுவிட்டானோ!' என்று.

அங்கிங்கு எனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் காற்று போல நிறைந்திருப்பவன், ஸ்ரீமந் நாராயணனே. அவன் தன் வைகுந்தக் கதவை திறவாமலிருக்கும் பொழுதும், உள்ளே புகுந்து அவனுக்கு சுகாநுபவம் அருள்கின்றானும். 'இத்தகைய பெரும் பேற்றை பெற்றிருக்கும் நீ உறங்கலாமோ?' என்று இடித்துரைக்கின்றாள். அருங்கலமே—என்ற அழைப்பிலே, தன் குழாமில், ஒரு மாணிக்கம் போன்று சிறப்புடையவள் என்பதாகும். 'சோம்பலே திருவுருவானவளே! தேடக் கிடைக்கா அரிய ஆபரணமாக எங்களுக்கு வாய்த்திருப்பவளே! உறக்க மயக்கத்தில் தட்டுத் தடுமாறி வராமல், தெளிந்து வந்து கதவைத் திற' என்கிறாள் கோதை. உலக அனைத்து உயிர்களும் தெளிவான சிந்தனையின்றி—பொன்னாசை — பெண்ணாசை—மண்ணாசையில் — வீழ்ந்துத் தட்டுத்தடுமாறி அலைகின்றனர். அலைகின்ற அலைகளிலே கண்ணாடி போல அவரவர் உருவைக் காணுதல் முடியுமோ?

முடியாதல்லவா! உலகப்பற்றில்—ஆசையில் அமிழ்ந்தவர்கள் பரமனின் அருளைக் காண இயலாது. தெளிவான—நிலைத்த—ஸ்படிக ஜலத்தில் தன் உருவை காணுதல் போல மனதை ஒரு முகப்படுத்தி — ஸ்திரப்படுத்தி—தியானித்தால் ஸ்ரீமந் நாராயணனின் திருவருளைப் பெறலாம், பேரின்பம் பெறலாம். இக்கருத்தையே—

மறப்பும் ஞானமும் நான்ஒன்று உணர்ந்திலன்
மறக்கும் என்றுசெந் தாமரைக் கண்ணொடு
மறப்பறஎன்னுள்ளேமன்னினான்தன்னை
மறப்பனோஇனி யான்என் மணியையே!

என்று நம்மாழ்வார் நமக்கெல்லாம் உணர்த்துகிறார். பகவானையேஉபாயமாகப்பற்றியிருக்கும்பாகவதர்களைக் குறிப்பிடும் 'நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற'வள்—என்பது. பிற விஷயங்கள் ஒன்றையும் கவனியாமல் தம்முடைய பரமன் அனுபவத்திலேயே மூழ்கி இருத்தல் வேண்டும். ஒவ்வொருவரிலும் கும்பகர்ணனை தமோகுணத்தை நீக்கிவிட வேண்டும். அப்படி நீக்கினால் துன்பம்—தொல்லை—துக்கம் யாவும் விலகிவிடும்.

(23-ம் பக்கத் தொடர்ச்சி)

த்வயத்தின் பூர்வ வாக்யம் அல்லது முதல் பாதியில் கூறப்பட்ட வ்யத் புத்தியும், அர்த்தமும் இங்கும் பூரண மாக பொருந்தும். தவிர ஸ்ரீமதே என்கிற பதம், இந்த சேதனனுகிய ஜீவாத்மா அடையப்போகும் எம் பெருமானுடைய கைங்கர்யத்தில், பிராட்டியோடு கூடிய திவ்ய தம்பதி களுக்கே கைங்கர்யம் செய்யப் போகிறது என்பதைத் தெரிவிக்கிறது என்பதாகும். அதாவது இந்த ஸ்ரீமத் ஸப்தம், சரணுகத வத்ஸலனுன எம் பெருமானுக்கு பிராட்டியானவள் எந்த விதத்திலும் குறைந்தவளல்ல என்றும், அவள் புருஷாகாரமாக இருந்து சேதனர்களைக் கருணையுடன் கடாக்ஷித்து, சேதனர்களின் கைங்கர் யங்களை பெருமாளுடன் சேர்ந்து ஏற்றுக் கொள்ள அனுகுணமாயிருக் கிருள் என்பதாகும்.

இனி உத்தர வாக்யத்தில் உள்ள நாராயணுய என்னும் பதத்திற்கு திரு மந்திரத்தில் கூறப்பட்ட அர்த்த விசேஷங்கள் யாவும் இங்கும் பொருத் தமே. தவிர ஏற்கனவே திருவெட் டெழுத்தின் பொருள் சுருக்கத்தில் விவரிக்கப்பட்டுள்ளபடியால் இங்கு விவரணம் செய்யப்படவில்லை. சுருக்க மாக கைங்கர்யம் செய்வது நாரா யணனுக்கு என்றும், கைங்கர்யத்தில் பேறு பெறுபவனும் நாராயணனே என்பதுமாகும்.

இனி நாராயண பதத்தின் முடிவில் உள்ள 'ஆய' என்ற நான்காம் வேற்றுமையுருபை கீழ்கண்டவாறு விவரணம் செய்யலாம்.

சதுர்த்திகள் மூன்று விதம் :

அகாரத்தில்
லுப்த சதுர்த்தி
(தத்வார்த்யே சதுர்த்தி)
(உள்ளம்)
நாராயணபதத்தில்
வ்யக்த சதுர்த்தி
(ப்ரார்த்தனையம் சதுர்த்தி)
உரை
த்வய உத்தரவாக்யத்தில்
வ்யக்த சதுர்த்தி
(கைங்கர்ய சதுர்த்தி)
செயல்

மேலே விவரித்தபடி இங்கு நான் காம் வேற்றுமை, எம்பெருமானுக்கு தான் செய்ய வேண்டிய கைங்கர்யம், வேண்டக் கூடியது என்பதைக் காட்டு கிறது.

இனி நம: என்ற நமஸ் ஸப்த மானது ஸ்வரூப விரோதி, உபாய விரோதி, புருஷார்த்த விரோதி ஆகிய மூன்று விரோதிகளையும் போக்குகிறது என்றும், இம்மூன்றும் போய் சேதனன் ஸ்வதந்திரன் இல்லை, பரமாத்வுக்கே சேஷபூதன் என்றும், நம என்பது தன் அனிஷ்டங் கள் எல்லாவற்றையும் நீக்கவேண்டும் என்ற பிரார்த்தனையும் ஆகும். இந்த த்வயமந்த்ரத்தின் உத்தரவாக்யத் தினுல், நான் ஸ்ரீமானுன நாராயண னுக்கே, என்னையே அளித்து சரணு கதியை செய்கிறேன் என்று சொல்லி நமம என்று என்னுடன் துவக்குவ தாகவும் உரைக்கலாம் என்பர் சிலர்.

த்வயத்தின் ஸாரமான முடிவுரை :

இவ்வாறு த்வயத்தின் பூர்வ வாக் யம் ப்ரபத்தியையும், உத்தரவாக்யம் பலனையும் (உபாயத்தையும் உபேயத் தையும்) கூறுவ்தாக பூர்வர்கள் அருளிச் செய்துள்ளனர். தவிர புரு ஷாகாரத்தையும், தந்நித்ய யோகத் தையும், ததுத்பாவிதமான வாத் ஸல்யாதி குணங்களையும், அந்த குண ப்ரகாஸமான திவ்யமங்கள விக்ர ஹத்தையும், குணவிக்ரஹ விசிஷ்ட வஸ்துவினுடைய உபாயத்வத்தையும், அவ்வுபாயஸ்விகாரத்தையும், தத்பல மான கைங்கர்யத்திற்கு ப்ரதிசம் பந்தி பிராட்டியும் பெருமாளுமே யாம் என்றும், அதன் சர்வ சேஷித் வத்தையும், தத்விஷய கைங்கர்யத் தையும், கைங்கர்ய விரோதி நிவர்த்தி யும் சொல்லியாயிற்று என்று தலைக் கட்டியுள்ளார் முமுக்ஷுப்படியின் ஆசிரியரான ஸ்ரீ பிள்ளை லோகாசாரி யர். இதுவேதான் திருவாய்மொழி யின் சாரமும் ஆகும். இதை இன் னும் சுலபமாக ஆழ்வாரின் திருவாய் மொழியின் வாயிலாக கீழ்வருமாறும் விளக்கலாம். திருவாய் மொழி முதல் பத்தால் சர்வேஸ் வரன் உபாய பூதன் என்றும், இரண் டாம் பத்தால் உபேயபூதன் என்றும், மூன்றும் பத்தால் அவன் திவ்ய மங் கள விக்ரஹ விசிஷ்டன் என்றும், நான்காம் பத்தால் அவனையொழிய ப்ராப்யமில்லை என்றும், மிதி உள்ள ஆறுபத்துக்களால் அவனையொழிய ப்ராபகம் இல்லை என்றும், ஆக திவ்ய மங்கள விக்ரஹ விசிஷ்டனுன ஸ்ரீமந் நாராயணனே உபாயோபேய பூதன் என்றும் சொல்லியிருப்பதனுல், தீர்க்க சரணுகதியை ப்ரதிபாதிப்ய தாய் இருக்கும் ஸாரதமான திருவாய் மொழி த்வயத்தின் விவரணமே என்பது நன்கு புலனுகும். இதுவே ரகஸ்யத்ரய சாரம ஆகும்.



# ஷண்மதமும் முத்துஸ்வாமி தீக்ஷிதரும்

8

இனி கந்தபுராணத்தை எடுத்துக் கொள்வோம். வீரபாகு முதலிய ஒன்பது வீரர்களால் சூழப்பட்டவர் ஆறுமுகர் என்பதை அனேக பாட்டுக்களில் ''ஸ்ரீ நவநந்தனுத்யுததீர:'' ''நவநந்த்யாதி பக்த ஜனுந்த:,'' ''நவ வீராநந்தவரகுருகுஹ:'', ''நவநந் தாத்யுமாஸித'' முதலிய பதங்களால் சொல்கிருர். காம்போஜிராகத்தில் பலரால் பாடப்படும் ''ஸ்ரீசுப்ரமண்யாய நமஸ்தே''யில் ''தாரக சிம்ஹ முக சூரபத்மாசுர சம்ஹர்த்ரே'' என்று தாரகாசுரன், சிம்மமுகன், சூரபத்மாசுரன் முதலிய அரக்கர்களுடைய வதத்தை வர்ணிக்கிருர். இந்த வதம் மற்ற கீர்த்தனைகளிலும் 'கர்வித சூராதி ஹரம்', 'சூரதாரகாதிஹரம்', 'கண்டித தாரக சூரம்' என்கிற பதங்களால் குறிப்பிடப்படுகிறது. சாமா ராக ''குருகுஹாய'' உருப்படியில் 'சாமரஸ்ய சம்பிரதாய' என்று முருகன் சமாதானத்தையே விரும்புகிறவர் என்கிருர். பிரம்மனை விடுவித்து ரக்ஷித்தல், வீரபாகுவை தூது அனுப்பியது போன்ற காரியங்கள் இதில் அடங்கும்.

இனி 'வைணவம்' என்கிற விஷ்ணு வழிபாட்டை ஆராய்வோம். விஷ்ணு வைகுண்ட வாசி. திருப்பாற்கடலில் ஆதிசேஷன் மேல் பள்ளி கொண்டிருப்பவர். சங்கையும் சக்ரத்தையும் கையிலேந்தியவர். லக்ஷ்மியை எப்பொழுதும் மார்பிலே தரித்திருப்பவர் ஸ்ரீனிவாசன். துஷ்ட நிக்ர சிஷ்ட பரிபாலனத்திற்காகவே அவதாரங்கள் எடுத்து அருள்பாலிக்க பொறுப்பேற்றுக் கொண்டவர். மத்ஸ்ய, கூர்ம, வராக, நரசிம்ம, வாமன, பரசுராம, ராம, கிருஷ்ண, புத்த, கல்கி அவதாரங்கள் முக்கியமான தசாவதாரங்கள். இவைகளில் இராமவதாரமும், கிருஷ்ணுவதாரமும் இதிஹாசங்களில் சம்பந்தப்பட்டு முக்கியத்வம் அடைந்திருக்கின்றன. விஷ்ணு புராணமும், பாகவதமும் விஷ்ணுவின் பல செயல்களைக் கூறும் முக்திய கிரந்தங்கள். ஆழ்வார்கள் இயற்றியநாலாயிர திவ்வியப் பிரபந்தம் தமிழ் வேத நூலாகப் போற்றப்படுகிறது. ஸ்ரீ ராமானுஜர் தோன்றிய பிறகு வைணவம் என்பது விசிஷ்டாத்வைதம் என்கிற தத்வமாக பாரத தேசம் முழுமையும் கொண்டாடப்படுகிறது. ஜீவன் - கைதி, பரம்பொருள்-காவலன். இந்த உடலே சிறை. காவலன் சொற்படி நடந்தால் கைதிக்கு சீக்கிரமே விடுதலை. இதுதான் சரணுகதி தத்வம். அத்வைதத்தின் மாறிய விளக்கம். வைணவப் பதிகள் நாடெங்கிலும் உள்ளன. ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்திருக்கும் கோயில்கள் சிறப்பு வாய்ந்தவைகளாகக் கருதப்படுகின்றன. திருப்பதி, காஞ்சி, ஸ்ரீரங்கம், பத்ரிநாத் முதலியன முக்கியமானவை. விஸ்வ ரூபமெடுத்து தன்னையே விளக்கிக் காட்டுவது பக்தன் பால் விஷ்ணுவிற்கு இருக்கும் அன்பின் எடுத்துக்காட்டாகவே அமைகிறது. ஸத்யவ்ரத ராஜனுக்கு மத்ஸ்யாவதாரத்தில் மீன் உருவத்தையே விஸ்வ ரூபமாக்கியது அவனை பிரளயத்திலிருந்து காப்பாற்றி பிறகு வைவஸ்வதமனுவாக நியமிக்கவே. வாமனுவதாரத்தில் மூன்ருவது அடிக்காக விஸ்வரூபமெடுத்து பலிக்கு அருள்பாலித்தார். கிருஷ்ணுவதாரத்தில் யசோதையும் அர்ஜுனனும் பாக்யசாலிகள். இப்படிப் பலப்பல.

தீக்ஷிதரின் விஷ்ணு கீர்த்தனைகள் சுமார் 60க்கும் மேல். இதில் பாதி இராமர் பேரிலும் கிருஷ்ணர் பேரிலும். இவர் பெரும்பாலும் பாகவதத்தையே அனுசரித்திருப்பதாகத் தெரிகிறது. கஜேந்திரனை முதலையிடமிருந்து காப்பாற்றியதை அனேக கீர்த்தனைகளில் குறிப்பிடுகிருர். 'கஜராஜக்ஷேமகரம்', 'நக்ரஹத தந்தி வரதம்', 'கஜேந்திரசம்ரக்ஷணம்', 'கஜேந்திர ரக்ஷண தீரம்' என்கிற வடமொழிச் சொற்கள் காணப்படுகின்றன. அதே போல் பக்தன் பிரஹ்லாதனை அங்கீகரித்தது, 'பரமபாகவத ப்ரஹ்லாத வரதம்', 'பரம பக்த ப்ரஹ்லாதாதி விநுத', 'பிரஹ்லாதாதி பக்தாபிமானம்', 'பரம பாகவத பிரஹ்லாத பக்த்யச்ச' என்கிற சொற்களால் கூறப்படுகிறது. கூர்மாவதாரத்தை 'மந்தரகிரிதர', 'மந்தரதர கராம்புஜம்' என்று கீர்த்தனைகளில் புகுத்துகிருர். வாமனுவதாரத்தை பிரமசாரி வேஷம் பூண்டவர் என்கிற அர்த்தத்தைக் கொண்ட 'வடு வேஷதாரிணம்' என்ற சொல்லால் குறிக்கிருர். வாழ்நாள் பூராவும் துர்நடத்தையுடன் இருந்து சாகும் தருவாயில் 'நாராயண' என்று சொன்னதிஞல் யமதூதர்களிடமிருந்து காப்பாற்றப்பட்ட அஜாமிளன், பூர்ண சந்திரிகா ராக 'சங்க சக்ர கதாபாணிம்' என்கிற கிருதியில் 'அஜாமிளப்ரப்ருதி அனேக தாசானி சம்தரணம்' என்று வர்ணிக்கப்படுகிருன். ஏகாதசி விரதம் துவாதசி

---

**திரு. என். பார்த்தசாரதி,**
**போளுர்.**

---

பாராயணமிருந்து துர்வாஸ கோபத்தையும் சக்தியற்றதாகச் செய்த அம்பரீஷன் கதையை ஹமீர்கல்யாணி ராக 'பரிமளரங்கநாதம்' உருப்படியில் 'அம்பரீஷ சிதாம்சுவேதாதி பூஜிதம்' என்கிருர். மற்ருெரு இடத்திலும் 'அம்பரீஷாதி விதிதம்' என்கிற சொல் வருகிறது.

இனி இராம கதையை எடுத்துக் கொள்வோம். மாஹிரிராக 'மா மவ ரகுவீர' கீர்த்தனையில் 'த்வாம் ஆஹு: ஈசாதய: தத்வமிதி' என்கிற சொற்ருெடரால் சிவன் முதற்கொண்டு எல்லோரும் இராமரை தத்வஸ்ரூபமாகவே சொல்கிருர்கள் என்கிருர் தீக்ஷிதர். 'ராமசந்திரேண சம்ரக்ஷிதோஹம்' என்கிற பாட்டில் பிரம்ம விஷ்ணு ருத்ரஸ்வரூபம் என்று போற்றுகிருர். ஸ்ரீரஞ்சனி ராக 'ஸ்ரீராமசந்திரோ' கீர்த்தனையில் விஸ்வாமித்ரருடைய யாகத்தைக் காப்பாற்றினது, தாடகை வதம், மிதிலாநகரப் பிரவேசம், வில் ஒடித்தல், சீதா கல்யாணம், பரசுராம கர்வ பங்கம் வரை எழுதிவிட்டார். அஹல்யைக்கு சாப விமோசனம் செய்தது 'பாதஜபாம்சுபாலித அஹல்யம்' என்று ஓர் இடத்திலும் 'அஹல்யாதேவி சாபவிமோசன சுசரித்திரம்' என்று மற்ருேர் இடத்திலும் குறிப்பிடுகிருர். 'சுபாஹு மாரீச கர தூஷணதிமத ஹரணுந்தகரூபிணே' என்று சுபாஹு, மாரீசன், கரன், தூஷணன் முதலியவர்களைக் கொன்றது தன்யாசி ராக 'இராமசந்திராதன்யம்' கீர்த்தனையில் இடம் பெறுகிறது. சபரி மோக்ஷம் ஒரு பாட்டில் சொல்லப் படுகிறது. தர்பசயனம், விபீஷணனை ரக்ஷித்தது, ராவணனைக் கொன்று வானரங்களுக்குப் பிரீதியாய் இதல், அனுமனுக்கு மதிப்பு இவைகள ஆங்காங்கே காணப்படுகின்றன. ஒரு பாட்டில் 'சாமதானபேதாதி சதுஷ்ட்ய ஸஜ்ஜன பாலயஸ்ய துஷ்ட ஹரஸ்ய' என்கிற சொற்ருெடரில் சாம தான பேத தண்டம் என்கிற நால்வகை யுக்திகளையும் துஷ்டர்களை அடக்கி நல்லோர்களைக் காக்க கையாண்டவர் இராமர் என்று வர்ணிக்கிருர். முடிவில் சிகரம் வைத்தாற் போல் எல்லோராலும் பாடப்படுகிற

---

மணிரங்கு ராக, 'மாமவ பட்டா பிராம'வில் அனுமனால் பாடப்பட்டு, பரத லக்ஷ்மண சத்ருக்ன விபீஷண சுக்ரீவ பிரமுகர்களால் சேவிக்கப் பட்டு, அத்ரி வசிஷ்ட முனிவர்களால் அனுக்ரஹிக்கப்பட்டு நவரத்ன மண் டபத்தில் மணிகள் பூண்ட சிம்ஹாச னத்தில் சீதா சமேதராய் கொலுவி ருக்கும் பட்டாபிஷேகக் காட்சியை அற்புதமாக நம்முன் கொண்டு வரு கிறார்.

அடுத்தது கிருஷ்ணாவதார வர்ணனை. மயில் இறகை அணிந்தவர், கஸ்தூரி திலக மணிந்தவர், புதிய துளசி மாலை பூண்டவர், சங்கசக்ரகதா பாணி, வெண்ணை வாசனை வாய் உடையவன், ஸ்ரீ ருக்மிணி சத்யபாமையுடன் கூடி யர் இந்த அர்த்தங்களுடன் கூடிய வடமொழிச் சொற்கள் கீர்த்தனை களில் வருகின்றன. அதே போல் பூதனை வதம், கோவர்த்தன கிரியை தாங்கினது, கோபிகைகளின் ஆசைக்கு ஏற்றவர், முரனைக் கொன்றவர், கம் சனைக் கொன்றவர் இந்த நிகழ்ச்சி களும் இடம் பெறுகின்றன. இடை யவர் வேஷம் பூண்டது, சாணூர மல் லனை வென்றது, காலாதுதைத்து சகடாசுரனைக் கொன்றது, மதம் கொண்ட யானையைப் பிளந்தது, த்ரோண கர்ண துர்யோதனாதிகளை ஒழித்தது, திரௌபதியின் மானத் தைக் காப்பாற்றியது இவ்வளவும் பைரவிராக 'பாலகோபால' கீர்த்தனை யில் சொல்லியிருக்கிறார். அர்ஜுன னுக்கு தேர் ஓட்டியதை 'தனஞ்சய சாரதே' என்கிறார் ஒரு பாட்டில். வத்ஸலா கல்யாணத்திற்கு காரண மானவர் என்கிறார். மற்றொரு இடத் தில் குபேரன் பிள்ளைகளாகிய நள கூபரனும் மணிக்ரீவனும் தகாத முறையில் இருந்தமைக்காக நாரத ரால் மருதமரங்களாக ஆகும்படி சபிக்கப்பட்டு, கிருஷ்ணனால் உர லுடன் இழுக்கையில் சாப விமோச னம் ஆனார்கள். இதை கௌடிபந்து ராக 'கிருஷ்ணானந்த முகுந்தமுராரே' கீர்த்தனையில் 'யமளார்ஜுனாதி பஞ் ஜனேயேந்திர' என்ற ஒரே சொல் லால் வர்ணிக்கிறார். அதே போல் ந்ருக மஹாராஜன் ஒரு தரம் தானம் கொடுத்த பசுவை மறுபடியும் அறி யாத்தனமாகவே தானம் கொடுத்த காரணத்தால் ஓணான் உருவமெடுத்து கிருஷ்ணனால் விடுதலையடைந்ததை முகாரிராக 'கோவிந்தராஜம்' பாட் டில் 'ந்ருக ராஜஸ்ய க்ருகலாச ஜன்மா பஹம்' என்கிற பதத்தால் சுட்டிக் காட்டுகிறார். அக்ரூரஸ்நேகிதம் ஒரு பாட்டில் வருகிறது. ஒரு பாரதப் போர் நிகழ்ச்சி. சக்ராயுதத்தால் சூரி யனை மறைத்து அஸ்தமனமான பொய்யை உண்டாக்கி ஜயத்ரதனை வதம் செய்து அர்ஜுனனுடைய பிர திக்ஞையை நிறைவேறச் செய்தவர் ஸ்ரீகிருஷ்ணன். இதை ரூபவதிராக 'ஸ்ரீகிருஷ்ணம் பஜரே'யில் 'சக்ரனி வாரித பாஸ்கரப்பிரகாசம்' என்ற சொல்லால் ஞாபகப்படுத்துகிறார்.

இனி விஷ்ணு க்ஷேத்ராடனம் செய் வோம். தீக்ஷிதர் பத்ரி, திருப்பதி, காஞ்சி, சோளங்கிபுரம், ஸ்ரீரங்கம், சிதம்பரம், திருக்கண்ணமங்கை, அழ கர் கோயில், குருவாயூர், திருவனந்த புரம் முதலிய க்ஷேத்ரங்களின் மூர்த்தி களின் பேரில் பாக்கள் இயற்றியுள் ளார். ஒன்றை மட்டும் கூறுவோம். வராளிராக 'சேஷாசல நாயகம்' கீர்த் தனையில் 'விசேஷபலப்ரதாயகம்', 'கௌஸ்துப பூஷாஸம்ஸ்கிருத பஹு தர வேஷாத்மக விக்ரஹம்' என்கிற சொற்கள் வெங்கடேசப் பெருமாள் விசேஷ பலன்களைத் தருபவர் என்றும் அனேக விதமான அலங்காரங்களு டன் கூடிய விக்ரஹத்தை உடையவர் என்றும் வர்ணிக்கின்றன. இவ்வளவு லீலைகள் கொண்ட மஹா விஷ்ணுவை 'வடசயனம்' என்று இரண்டு பாட்டுக் களில் புகுத்தி பிரளய காலத்தில் ஆலை யிலையில் துயில் கொள்ளும் பரந்தா மன் என்று நமக்கு உணர்த்துகிறார்.

ஷண்மதத்தில் கடைசியாக வருவது சௌரம் என்கிற சூரிய வழிபாடு. தினமும் நம் கண்களில் படும் பிரத் யக்ஷ தெய்வம். நாம் செய்யும் சகல காரியங்களுக்கும், மனதிலுள்ள எண் ணங்களுக்கும் சாக்ஷியாக பவனி வரு கிறார். சூரிய மண்டலம் என்கிற நக்ஷத்திர கூட்டங்களுக்கும் கோள் களுக்கும் ஒளியைக் கொடுப்பவர். 'கடவுள் இல்லாவிடில்' என்று நினைக்க முடியுமா? அதே போல் 'சூரியன் இல்லாவிடில்' என்றும் நினைக்க முடி யாது. ஆகையால் சூரியனும் பர மாத்மாவும் ஒன்றுதான். இராம ராவண யுத்தத்தில் அகஸ்திய முனி வர் இராமருக்கு சூரியனை 'இவர் தான் பிரம்ம தேவர்; விஷ்ணு; ருத் ரன்; ஷண்முகர்; பிரஜாபதி தேவர்; தேவேந்திரர்; குபேரர்; காலமூர்த்தி; தர்மராஜர்; சந்திரர்; வருணதேவர்' என்றெல்லாம் வர்ணனை செய்யும் ஆதித்ய மந்திரத்தை உபதேசித்து யுத்தத்தில் ஜெயத்தை உண்டு பண் ணினார். வேதங்களில் வரும் சூரிய நமஸ்கார மந்திரங்கள் சரீர பீடை களை அகற்றும் வல்லமை படைத் தவை. நவக்ரஹங்களில் சூரியனையும் சேர்த்து, ஒன்பதாக பூஜித்து

## விதி என்றால் என்ன?

விதி எங்கே இருக்கிறது? எதை விதைத்தோமோ அதைத்தான் அறுவடை செய்கிறோம். நமது விதியை நாமே வகுத்துக்கொள் கிறோம். எனவே அதன் பொருட்டுத் தூற்றுவதற்கும் ஒருவருமில்லை பாராட்டுவதற்கும் ஒருவருமில்லை. காற்று வீசியபடி இருக்கிறது. பாய் மரங்களை விரித்துக் காற்றைத் தனக்கு சாதகமாகப் பயன்படுத் திக்கொள்ளும் கப்பல்கள், தங்கள் வழியே முன்னேறிச் செல்கின்றன. ஆனால் பாய்களைச் சுருட்டி வைத்துள்ள கப்பல்கள் காற்றை ஏற்றுப் பயன்பெறுவதில்லை. இது காற்றினுடைய குற்றமாகுமா?

— சுவாமி விவேகானந்தர்.

தொகுப்பு : தேனி எம். சுப்பிரமணி.

ஹோமங்கள் செய்தால் குடும்ப அரிஷ்டங்கள் ஒழிந்து க்ஷேமமுண்டாகும். சூரியன் கச்யபருக்கும் தக்ஷன்மகள் அதிதிக்கும் உண்டானவர். இவர் குமாரர் வைவஸ்வத மனு ஆவார். இவர் காலம்தான் இப்பொழுது நடந்து கொண்டிருக்கிறது. பூரிக்கருகேயுள்ள கோனரக் கோயிலும், தஞ்சை மாவட்டத்திலுள்ள சூரிய நாராயணர் கோயிலும் சூரியனுக்காக ஏற்பட்ட தனிக் கோயில்கள். ஆனால் இவரை நவக்ரஹத்துடன் சேர்த்தே வழிபடும் முறைதான் வழக்கில் இருந்து வருகிறது.

முத்துஸ்வாமி தீக்ஷிதர் சூரியனுக்காகவும் மற்ற கிரஹங்களுக்காகவும் ஒன்பது பாக்கள் வடித்துள்ளார். சௌராஷ்டிர ராகத்தில் 'சூரிய மூர்த்தே'; அசாவேரியில் 'சந்திரம் பஜ மானஸ'; சுரடியில் 'அங்காரகம்'; நாட்டகுறச்சியில் 'புதம் ஆஸ்ரயாமி'; அடாணாவில் 'பிரஹஸ்பதே'; பரஜீவில் 'ஸ்ரீ சுக்ரபகவந்தம்'; யதுகுல காம்போதியில் 'திவாகரதனுஜம்'; ரமாமனோஹரியில் 'ஸ்மராம்யகம்'; சாமர ராகத்தில் 'மஹாசுரம்' இந்த ஒன்பது கீர்த்தனைகளிலும் அந்த அந்த கிரஹங்களின் சிறப்பு அம்சங்களையும் ஜோஸிய சம்பந்தமான நுட்பங்களையும், மந்திர சம்பந்தங்களையும் வெளிப்படுத்தியுள்ளார்.

தீக்ஷிதரின் கீர்த்தனைகளை ஷண்மதத்திற்கு ஏற்றவாறு பிரித்து ஆராய்ந்து பார்க்கும் பொழுது ஒரு தனித் தன்மை புலப்படுகிறது. ஒரு மூர்த்தியைப் பற்றி இயற்றிய பாடல்களில் அந்த மூர்த்தியைப் பற்றின போற்றுதல்களும், வரலாறுகளும்தான் காணப்படுமே ஒழிய வேறு ஒரு மூர்த்தியினுடைய சிறப்பைப் புகுத்திக் குழப்பினதே கிடையாது. வேறு ஒரு மூர்த்தியை பாட்டின் அமைப்புக்காக சொல்ல வேண்டியிருந்தால் உறவு முறை போன்று எளிதான விஷயங்களை மட்டும் சொல்லி முதல் எடுத்துக் கொண்ட மூர்த்தியின் புகழுக்கு பங்கம் வராமல் பார்த்துக் கொண்டிருக்கிறார். ஷண்மதத்தின் உள்கருத்தே இதுதானே! அந்த அந்த மூர்த்தி தனித்தனி என்று தானே அர்த்தம். வாழ்க ஷண்மதத்தின் அடிப்படையிலுள்ள ஹிந்து மதம். ஓங்குக முத்துஸ்வாமி தீக்ஷிதரின் புகழ்!

(முடிந்தது)

# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்தியாயம் — 18

பகுதி — 8

ஸாத்வீக ஞானம் எத்தகையது?

ஸர்வபூதேஷு யேனைகம்
பாவ மவ்யய மீக்ஷதே |
அவிபக்தம் விபக் தேஷு
தஜ்ஞானம் வித்தி ஸாத்விகம் ||
(18-20)

'வேறு வேறாக உள்ள பூதங்களில் (பொருள்களில்) வேறுபடாத அறியாத ஏகவஸ்துவை எதனால் பார்க்கிறாயோ, அந்த ஞானம் சாத்விகமானது என அறிவாயாக.'

தெரு வழியாகப் போய்க் கொண்டிருக்கிறோம். மாலை வேளை மந்த மாருதம் வீசுகிறது. வீசும் காற்றுடன் மல்லிகைப் பூவின் நறுமணம் கம்மென்று மணக்கிறது. திரும்பிப் பார்க்கிறோம். அருகில் ஒரு பூக்கடை இருப்பது கண்களில் படுகிறது. சிறிது தூரம் சென்றிருப்போம். முனிசிபல் லாரி ஒன்று நம்மைத் தாண்டிச் செல்கிறது. அது நம்மைத் தாண்டிச் சென்றதும் அப்பப்பா, பொறுக்க முடியாத ஒரு துர்நாற்றம் வீசவே மூக்கை இறுக்கப் பொத்திக் கொள்கிறோம். மல்லிகைப் பூவின் நறுமணத்தைச் சுமந்து வந்த அதே காற்றுத்தான் லாரியில் சென்ற மலத்தின் துர்நாற்றத்தையும் சுமந்து வந்தது. ஆனால் நறுமணம், துர்நாற்றம் இரண்டினாலும் காற்று எவ்விதத்திலும் பாதிக்கப்படவில்லை. புறப் பொருள்களின் தன்மையினால் தாற்காலிகமாக காற்று பாதிக்கப்பட்டது போன்று தென்பட்டது. அவ்வளவு தான். பரமாத்மாவும் அந்தக் காற்றைப் போன்று விளங்குகிறது.

அண்ட பகிரண்டங்கள் யாவும் பரமாத்மாவிடமிருந்து தோன்றி வந்துள்ளன. அவற்றின் தோற்றத்தால் பரமாத்மனுக்கு எந்தவிதக் குறைவும் ஏற்பட்டு விடவில்லை. திரும்ப இந்தத் தோற்றத்துக்கு வந்துள்ள பிரபஞ்சம் யாவும் மறைந்து போய் விடினும் பரமாத்மாவிடம் எந்தவித மாற்றமும் நிகழப் போவதில்லை. போக்கும் வரவும் இல்லாப்புண்ணியப் பொருள் அது. ஆதியும் அந்தமும் அற்ற பரம்பொருள் அது. கொசு, யானை, புல், புலி, மலை, கல் போன்ற வேறு வேறாகத் தோன்றும் பொருள்களிடத்தும் மாறாத பொருளாகத் திகழ்வது அது.

'ஏகோதேவ: ஸர்வ பூதாந்தராத்மா'- பரம்பொருள் ஒன்றே அது அனைத்துப் பொருள்களிலும் திலங்குகிறது. பானை ஒன்றாய் இருக்கும் பொழுதும், அது இரண்டாய் அல்லது பலவாய் உடையும் பொழுதும் எவ்விதம் அதனுள் உள்ள ஆகாசம் பின்னப்படுவதில்லையோ, அதுபோல பிரபஞ்சத்தில் எத்தனை நட்சத்திர மண்டலங்கள் தோன்றிடினும் அல்லது அழிந்திடினும், அவை அனைத்திற்கும் ஆதாரமாயுள்ள பரமாத்மன் யாண்டும் மாற்றம் எதுவுமின்றி ஒன்றாகவே திகழ்கிறது. இத்தகைய பன்மையில் ஒருமை அல்லது வேற்றுமையில் ஒற்றுமையைக் காண்பதுவே ஸாத்வீக ஞானம் என்பது பகவானது கருத்து.

இராஜஸிக ஞானத்தைப் பற்றிய விளக்கம் அடுத்து வருகிறது.

ப்ருதக்த்வேன து யஜ்ஞானம்
நானாபாவான் ப்ருதக்விதான் |
வேத்தி ஸர்வேஷு பூதேஷு
தஜ்ஞானம் வித்தி ராஜஸம் ||
(18-21)

"எந்த ஞானமானது எல்லா உயிர்களிலும் வெவ்வேறு விதமான பல ஜீவர்களை ஒன்றினின்று மற்றது வேறானது என்று அறிகிறதோ அந்த ஞானத்தை ராஜஸம் என்று அறிவாயாக".

முகம் பார்க்கும் கண்ணாடி ஒன்று இருக்கிறது. அதன் முன் பச்சைக் குழந்தை ஒன்று தவழ்ந்து செல்கிறது. கண்ணாடியில் அது தன் பிம்பத்தைப் பார்க்கிறது. அந்தப் பிம்பத்தைப் பிறிதொரு குழந்தை என்று அது எண்ணி கண்ணாடிக்கு அருகில் சென்று அன்புடன் அந்த (பிம்பக்) குழந்தையை முத்தமிட முயல்கிறது. இந்தக் குழந்தை அங்கிருந்து அகன்று சென்றதும், அந்த வீட்டில் வளரும் நாய் அந்தக் கண்ணாடியின்முன் வருகிறது. அதுவும் கண்ணாடியில் தன் பிம்பத்தைக் கண்டதும் அங்கே பிறிதொரு நாய் தனக்குப் போட்டியாக வந்துவிட்டது என்று கருதி அதைப் பார்த்து 'லொள், லொள்' என்று குரைக்கிறது. குழந்தையின் செயலுக்கும், நாயின் செயலுக்கும் இரண்டிற்குமே காரணம் யாது? அறியாமை தான்.

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.Sc., M.Phil.
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

எந்தப் பொருள் கண்ணாடியின்முன் காணப்பட்டாலும், அதில் அதன் பிம்பம் தோன்றும். அத்தகைய பிம்பங்களால் கண்ணாடி எந்தவிதத்திலும் பாதிக்கப்படுவதில்லை என்று அறிவது ஸாத்வீக ஞானம். மாறாக கண்ணாடியில் தோன்றும் பிம்பங்கள் உண்மையென்று எண்ணி ஒன்றில் விருப்பும் மற்றதில் வெறுப்பும் கொள்வது அறியாமை. அதுவே ராஜஸிக

ஞானம். ஒன்றில் பலவற்றைக் காணல் ராஜஸிக ஞானம்.

நமது விருப்பு வெறுப்புக்கள் நமது உண்மை அறிவை மறைக்கிறது. காண்கின்ற பொருள் அனைத்திலும் உள்ளது. ஒரே பரம்பொருளே என்ற நல் அறிவை நம்மிடம் நிலவும் ராகத் வேஷங்கள் மறைத்து விடுகின்றன. இதனால்தான் வீட்டிலும் சரி நாட்டிலும் சரி பிரச்சினைகள் ஓயாது தோன்றிக் கொண்டேயிருக்கின்றன. மாமியார் மருமகள் சண்டை முதல் தொழிலாளி - முதலாளி சண்டை வரை அனைத்துக்கும் காரணம் இந்த ராகத் வேஷங்களே யாகும். ராஜஸிக ஞானம் பிரிவை உண்டு பண்ணுகிறது.

யத்து க்ருத்ஸ்னவ தேகஸ்மின்
காா்யே ஸக்தமஹைதுகம் |
அதத் வாா்த்த வதல்பம் ச
தத்தாமஸ முதாஹ்ருதம் || (18-22)

'ஒரு செயலையே முழுதுமென்று பற்று வைத்து யுக்திக்குப் பொருந்தாததாயும் உண்மைக்கு ஒவ்வாததாயும், அற்பமாயுமுள்ள ஞானம் எதுவோ அது தாமஸம். எனப்படுகிறது.'

'எனது கருத்து ஒன்றே சிறந்தது, என் சமயம் ஒன்றே உண்மைச் சமயம், அது ஒன்றே மோட்சம் தரவல்லது நான் வணங்கும் கடவுள் ஒருவர்தான் உண்மைக் கடவுள்!' என்று கூறும் பலர் நம்மிடையே உளர். அத்தகையோர் எவ்வளவு தான் கற்றவர்களாகத் தென்படினும் உண்மையில் கிணற்றுத் தவளைகளுக் கொப்பாவர்.

'மனிதனுக்கு உள்ளது ஒரே பிறவி. இப்பிறவியில் அவன் தவறு செய்தால் தீராத நரகத்தில் அவனைக் கடவுள் தள்ளிவிடுவார்;' என்று சில சமய வாதிகள் கூறுவர். அந்தக் கூற்று எவ்விதம் சிறுபிள்ளைத் தனமானது, பகுத்தறிவுக்கு ஒவ்வாதது, உண்மைக்கு முற்றிலும் முரணானது என்பதை பகவான் இந்த சுலோகத்தில் எடுத்துரைக்கிறார்.

இன்னும் சிலர் 'இந்த உடல்தான் எல்லாம். இது அழிந்தால் எல்லாம் அழிந்ததற்கு நிகர்' என்றும் கருதுகின்றனர். அத்தகையோர் இந்த அற்ப உடலைப் பெரிதும் பேணிப் பாதுகாக்கின்றனர். அவர்களது இந்த எண்ணமும் தவறானது. புல்லியது, உண்மைக்கு முரணானது.

உடல்மீது அபரிமிதமான பற்று வைப்பவர்கள் அதைப் பேணிப் பாதுகாப்பதிலேயே தங்கள் கவனத்தையெல்லாம் செலுத்துபவர் வரிசையில் தான் நம்மில் பெரும்பாலோர் உளர். அது தாமஸிக அறிவிலிருந்து தோன்றியதாகும். உடல் மறையக் கூடியது. எவ்வளவுதான் அதை அத்தரும் ஐவ்வாதும் விட்டு போஷித்தாலும், திடீரென்று செத்து விழக் கூடியது. மாறாக உடலினுள் உறையும் ஆன்மா தோன்றாதது, மறையாதது, அழியாதது என்ற அறிவு எவர்களிடம் காணப்படுகிறதோ அதுவே உண்மை ஞானமாகும்.

சமயவாதிகள் தங்களுக்குள் சண்டையிட முக்கியக் காரணம் அவர்களிடம் நிலவும் இந்த தாமஸிக ஞானமேயாகும். தன் கருத்து மட்டும் சரியானது. பிறரது கருத்து தவறானது என்று எண்ணுபவர்கள் உண்மையை அறியாதவர்கள். அத்தகையவர்களிடம் நாம் வீணே தர்க்கம் செய்து நேரத்தைச் செலவிடுவதில் எந்தவிதப் பயனுமில்லை. அவர்களிடமிருந்து நாம் சிறிது விலகியே நிற்க வேண்டும். மல்லிகைப் பூ அடுத்தவர் வீட்டுச் செடியில் இருந்தாலும் எவ்வாறு அதிலுள்ள நறுமணம் அகன்றுவிடாதோ, அதுபோல மாற்றுக் கொள்கையுடையவர்களிடமும் உண்மையைக் காண வல்லவர்களே நல்லறிவு வாய்க்கப் பெற்றவர்கள் ஆவர்.

ஸாத்விக கர்மம் பற்றிய விளக்கம் அடுத்த சுலோகத்தில் வருகிறது.

(தொடரும்)

## ஐந்திணை

தமிழ் இலக்கிய வரலாற்றுப்படி குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம் மற்றும் நெய்தல் என்பவைகள் ஐந்திணை ஆகுமென்பர். மலையும், மலை சார்ந்த இடமும் குறிஞ்சியாகும். காடும், காடு சார்ந்த இடமும் முல்லை என்பர். குறிஞ்சியும் முல்லையும், திரியுமிடம் பாலையாகும். வயலும், வயல் சார்ந்த நிலமும் மருதமாகும். கடலும், கடல் சார்ந்த நிலமும் நெய்தல் எனக் கூறுவர். ஐந்திணைகளுக்கு உரிய சிறப்புத் தெய்வமாக குறிஞ்சிக்கு-முருகனையும் பாலைக்கு-துர்க்கையையும், முல்லைக்கு-திருமாலையும், மருதத்திற்கு-இந்திரனையும், நெய்தலுக்கு-வருணனையும் 'ஐந்திணைத் தெய்வம்' என்று வழங்குவர். குறிஞ்சிக்கு-நள்ளிரவும், பாலைக்கு-நண்பகலும், முல்லைக்கு-மாலையும், மருதத்திற்கு-வைகறைப்பொழுதும், நெய்தலுக்கு-முன் இரவும் ஆக மேற் சொன்னவைகளை 'ஐந்திணைப்பொழுது' என விளம்புவர். குறிஞ்சிக்கு-கூதிர்ப்பருவமும், பாலைக்கு இளவேனில்-முதுவேனில் பருவங்களும், முல்லைக்கு-கார்காலமும், மருதத்திற்கு-இளவேனிலும், நெய்தலுக்கு-கார்காலமும் ஆக மேற் கூறிய பருவகாலங்களை 'ஐந்திணைப் பருவங்க'ளாக சொல்லுவார்கள். மேலும் ஒவ்வொரு திணைக்கும் சிறப்பான இசையும் உண்டு என்று கூறுவார்கள்.

**திரு. முத்துமணி — கோவில்பட்டி.**

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

தான். அவனுல் தானே பாரத யுத்தமே தோன்றியது? அப்படிப்பட்டவன் சூரிய தேஜஸ்ஸோடு வீர சொர்க்கத்தில் இருக்கிறன். ஆனல் வீராதி வீரர்களும் ஒழுக்கம் நிறைந்தவர்களுமான என் தம்பிகளேயும் திரெளபதியையும் நான் இங்கே பார்க்கவில்லே. கர்ணன் யார் என்பது தெரியாமல் அல்லவோ நாங்கள் அவனேக் கொன்ருேம். அவனே நினேத்தால் என் துக்கம் அதிகரிக்கிறது. எனக்காக போரில் உயிர் நீத்த எண்ணிறந்த நண்பர்களேயும், அரசர்களேயும் வீரன் அபிமன்யுவையும் இன்னும் பலரையும் நான் இந்த வீர சொர்க்கத்தில் காணவில்லேயே? நான் அவர்களேயெல்லாம் பார்க்க வேண்டும். அவர்கள் இருக்கும் இடம் தான் எனக்கு வீர சொர்க்கம். என்னே அவர்கள் இருக்குமிடத்திற்கு அனுப்பி விடுங்கள். நான் இங்கே இருக்க விரும்பவில்லே" என்று தர்ம புத்திரன் தன் விருப்பத்தை தெரிவித்தான்.

இதைக் கேட்ட தேவர்கள், "ராஜ சிரேஷ்டனே! இதுதான் உமது விருப்பம் என்ருல்...... நீர் உமது தம்பிகள் இருக்குமிடம் போகலாம்." என்று கூறி தர்ம புத்திரனே தேவ தூதனேடு அனுப்பி வைத்தார்கள்.

தேவ தூதனேத் தொடர்ந்து சென்ற தர்ம புத்திரன், இருள் சூழ்ந்த பாதையில் செல்ல, தர்ம புத்திரனின் கண்களுக்கு ஓரளவுக்குப் புலப்பட்ட காட்சிகள் எல்லாம் மிகப் பயங்கரமாய் இருந்தது. கைகால்கள் வெட்டப்பட்ட நிலேயில் ஆங்காங்கு விழுந்து கிடக்கும் மனிதர்களும், நாற்புறமும் சிதறிக் கிடக்கும் எலும்புகளும், மாமிசங்களுமாய் சகிக்க முடியாமல் வீசிய துர்நாற்றமும் கூடிய அந்த வழியில் சென்று கொண்டிருந்த தர்ம புத்திரன் ஏதும் புரியாத சிந்தனேக் குழப்பத்தில், "என் சகோதரர்களும் திரெளபதியும் எங்கே இருக்கிருர்கள்? இதே வழியில் இன்னும் எவ்வளவு தூரம் போக வேண்டும்? என்று தேவ தூதனேப் பார்த்துக் கேட்டான்.

"நீங்கள் திரும்பிப் போக வேண்டுமானல் போகலாம்" என்று தேவ தூதன் சொல்லவும், துர்நாற்றத்தைச் சகிக்க முடியாமல் தர்ம புத்திரன் திரும்பிச் செல்ல எண்ணிய போது நாற்புறங்களிலிருந்தும் தீனமான ஓலங்கள் கிளம்பின.

"தர்மத்தின் காவலனய் வந்த தர்ம புத்திரரே! நீங்கள் இங்கிருந்து போய் விட வேண்டாம். எங்களேயெல்லாம் ரட்சிக்கவாவது நீங்கள் இங்கே ஒரு முகூர்த்த காலமாவது நில்லும். நீங்கள் இங்கே வந்தபோது துர்நாற்றம் விலகி நல்ல மணம் நிறைந்த காற்று வீசிற்று. அதை நாங்கள் அனுபவித்தோம். அதனல் எங்களுக்கு சுகமும் சந்தோஷமும் உண்டாயிற்று. ஓ குந்தி குமாரனே! உங்களேப் பார்த்துக் கொண்டு இருந்தாலே போதும். நாங்கள் சுகம் பெறுவோம். நீர் இருக்கும் வேளே எங்களே வாட்டும் வேதனே கொஞ்சம் ஓய்கிறது. எனவே எங்களே ரட்சிக்க நீர் ஒரே ஒரு முகூர்த்த நேரமாவது நில்லும்." என்று நாற்புறமும் அழு குரல்கள் எழுந்தது.

தீனமான அந்த அவலக் குரல்களேக் கேட்ட தர்ம புத்திரன் மனக்கலக்கத்துடன், 'இந்த குரல்களெல்லாம் எனக்கு மிகப் பழக்கமானவையாகத் தோன்றுகிறதே!' என நினேத்தவாறே "நீங்களெல்லாம் யார்? ஏன் இப்படி நரகத்தில் கிடந்து வாடுகிறீர்கள்?" என்று துயரத்துடன் கேட்டான்.

"குந்தி குமாரனே! நான் கர்ணன்!" என்று ஒரு குரல் சொல்ல இன்னெரு புறமிருந்து, "நான் திரெளபதி!" என்றது ஒரு தீனமான குரல். அதைத் தொடர்ந்து, "நான் அருச்சுனன்! நான் பீமசேனன்! நாங்கள் மாத்ரியின் மைந்தர்களான நகுல சகதேவர்கள்! நான் அபிமன்யு! நான் பாஞ்சால மன்னன்! நாங்கள் திரெளபதியின் குமாரர்கள்!" என்று இப்படி இன்னும் பல குரல்கள் ஒன்றன் பின் ஒன்ருய் சொல்லிக் கொண்டே போக...... தர்ம புத்திரன் தாள முடியாத சோகத்தில் ஆழ்ந்தான்.

## அநுபவம்

எவ்வித சொந்த அநுபவமும் இன்றிச் சமயப் புத்தகங்களே மட்டும் படித்து விட்டுச் சிலர் ஈசுவரனே விவரிக்க முயல்கிருர்களே, இது எத்தனே விசித்திரம். இது தேசப் படத்தில் மட்டும் காசியைப் பார்த்துவிட்டு அந்த ஸ்தலத்தைப் பற்றி விமர்சிப்பது போன்றதே!

— ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.

## பக்தி சிரத்தை

குளத்தில் மீன்கள் எவ்வளவு தூரத்திலிருந்தாலும் ஓர் இறையைப் போட்டதும் நாலா பக்கங்களிலிருந்தும் அதனிடம் ஓடி வருகின்றன. அதே போல் நம் மனத் தடாகத்தில் பக்தி சிரத்தையைப் போட்டோமானல் பகவன் அதைத் தேடி ஓடி வருகிருன்.

— ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.

தொகுத்தவர் : கமலா மாரியப்பன்.

"ஐயோ! இவர்களெல்லாம் என்ன பாவத்தைச் செய்தார்கள் இந்த நரகத்தை அனுபவிக்க? அந்த திருத ராஷ்டிரனின் மகன் துரியோதனன் என்ன புண்ணியத்தைச் செய்தான்... சூரிய தேஜஸ்ஸோடு வீர சொர்க் கத்தை அடைய? தர்மம் என்பது பொய்த்துப் போனதா? இல்லை... நான் காண்பதெல்லாம் மாயத் தோற்றமா? இல்லை இது உண்மை தானு?" என்று கலங்கி தேவர்களை யும் தர்மத்தையும் கடுமையாய் நிந் தித்தான் தர்மபுத்திரன். பின் தேவ தூதனைப் பார்த்து, "ஓ தேவ தூதனே! நீ உன் இருப்பிடம் போ! நான் இங்கேயே இவர்களுடன் நரகத் தில் வாழ்வேன்." என்று சொன்னுன்.

தேவதூதன் திரும்பி வந்து இந் திரனிடம் தர்ம புத்திரன் சொன் னதையெல்லாம் சொன்னுன்.

ஒரு முகூர்த்த காலம் கழிந்தது. இந்திரனும் தர்ம ராஜனை யம தேவன் தர்ம புத்திரன் இருந்த இடத்திற்கு வந்தார்கள். அவர்கள் வந்ததும் இருள் விலகி பிரகாசமேற் பட்டது. நாற்புறமும் தர்ம புத்திரன் கண்ட கோரக் காட்சிகளும் தீனக் குரல்களும் மறைந்து, குளிர்ச்சியான சுகமான காற்று வீசுவதை தர்ம புத்திரன் உணர்ந்தான். தர்ம ராஜன் தன் மகனைப் பார்த்து, "குந்தி குமாரனே சோகத்தை விடுவாய். மூன்ருவது முறையாக உன்னைச் சோதிக்க நான் செய்த மாயமே... இத்தனை நேரமும் நீ கண்ட காட்சி களும் கேட்ட அவலக் குரல்களும். மகனே! மற்றவர்களின் நலனுக்காக நீ நரகத்தையும் அனுபவிக்கத் துணிந் தாயே, அதைக் கண்டு நான் பூரிப் படைகிறேன். எத்தகைய சோதனை யிலும் தர்மத்தைப் புறக்கணிக்காமல் நடந்து கொண்ட புத்திமானே! அரச ஞைப் பொறுப்பேற்று ஆட்சி செய்த அனைவரும் நரகத்தைப் பார்த்தே ஆக வேண்டும். அந்தக் கட்டாயத் தால் உன்னுலும் ஒரு முகூர்த்த நேரம் இந்த நரக வேதனை அனு பவிக்கப்பட்டது. உண்மையில் உன் தம்பிகளோ திரௌபதியோ இல்லை சத்தியவான் கர்ணனே நரகத்தை அடையவில்லை. இது தேவலோகம். இதோ பார்! திரிலோக சஞ்சாரியான நாரதர்." என்று தன் மகனுக்கு திவ்ய மான காட்சிகளைக் காட்டினுன் தர்ம தேவன்.

அதன்பின் தர்ம புத்திரன் மானிட தேகத்தை விட்டு திவ்யமான சரீரத் தைப் பெற்ருன். அதன் பயனுய் மனிதப் பிறப்பின் இயற்கையாய் அமைந்த பகையை மன வருத்தம் பந்த பாசம் என்று ஏது மற்றவனுய் தூய்மை அடைந்தார். தேவர்களும் ரிஷிகளும் சூழ கர்ணனும் மற்றவர் களும்திருதராஷ்டிரனின் புத்திரர் களும் பகை நீங்கி ஒரு உன்னத நிலையை அடைந்திருப்பதைக் கண்டு தர்ம புத்திரன் மனச் சாந்தி அடைந் தான்!

ஃ ஃ ஃ

---

15-ம் பக்கம் தொடர்ச்சி)

அதனுல் தான், வீரபத்திரனுல் தோற்கடிக்கப்பட்ட தேவர்கள் பிர மனிடம் சென்று தக்ஷயாக நாசம் உண்டானதைப் பற்றி, 'யாகம் செய் விக்கும் புரோகிதர்கள் யாகத்தைக் காண்பதற்காக வந்து சபையில் இருந் தவர்கள் ஆகிய இவர்களோடு கூடிய தேவர்களனைவரும் ருத்திரனது சேனை களினுல் சூலம் பட்டாக்கத்தி கதை இரும்புத்தடி இரும்புலக்கை கத்தி ஆகியவற்றின் மூலம் கிழிக்கப்பட்ட வையும் உடைக்கப்பட்டவையுமான தம்முறுப்புக்களை யுடையவர்களாய் மிகவும் அஞ்சிச் சென்று பிரமதேவனை வணங்கி நடந்த இச்செய்தியையெல் லாம் விண்ணப்பஞ்செய்தனர்' (ஸ்ரீ பாக 4-6-1, 2) என்று விண்ணப் பித்ததாகக் கூறப்படுவது பொருந்து கிறது.

அதே காரணத்திஞல்தான், தக்ஷன் பிழைத்த பிறகு பிரமதாதி வீரர் களின் ஸம்பந்தத்தா லுண்டான தோஷத்தைப் போக்குதற்காக வைஷ்ணவ த்ரிகபால புரோடாச ஹோமம் (விஷ்ணுவை தேவதை யாகவும் மூன்று கபாலங்களில்-மண் பாத்திரங்களில் வைத்துப் பக்குவம் செய்யப்பட்ட புரோடாசமென்னும் மாவுணவை ஹவிஸ்ஸாகவும் கொண் டதொரு ஹோமம்) செய்யப்பட்ட வளவில் விஷ்ணுவின் தோற்றம், 'ஹே விதுரரே ஹவிஸ்ஸை எடுத்த யாக புரோகிதரோடு கூட யாகம் செய்யும் தக்ஷன் சுத்தமான எண்ணத் துடன் த்யானம் செய்தான். அப் போது விஷ்ணு தோன்றினுர்' (ஸ்ரீ பாக 4-7-18) என்று கூறப்படுவதும் பொருந்துகிறது.

ஆக, தக்ஷ யாகத்தில் வீரபத்திரன் விஷ்ணுவை வென்ருனென்று கூறு வது யுக்திக்கும் பிரமாண நூலுக்கும் முரண்பட்டதாகையால், சைவர்கள் பரம்பரையாகக் கூறும் அக்கூற்று ப்ரமாண நூல்களை இசையும் ஸத்துவ குணமுடைய மக்களால் ஆதரிக்கத் தக்கதல்ல என்பது இங்கு அவசிய மாக அறியத்தக்கது.

(தொடரும்)

# ஆசாரமும் அனுஷ்டானமும்

திரு. எஸ். ராமசாமி-மதுரை.

அதோ அவர் மாந்தோல் விரித்த மணையில் அமர்ந்து, ஜபத்தில் ஈடுபட்டு இருக்கிறார். திடீரென்று அவருடைய பேரன், இரண்டு வயது குழந்தை தாத்தா வென்று கூப்பிட்டுக் கொண்டு மடியில் விழுகிறது. அவருக்கு ருத்ர-கோபம் வருகிறது. குழந்தையை உதறிவிட்டு, கிணற்றடிக்குப் போய் நாலு வாளி தண்ணீர் இழுத்து தலையில் கொட்டிக் கொள்கிறார். இதற்கிடையில் அவர் மனைவி குழந்தைகளை, குரங்குகளாகவும், ஆசார அறிவு அற்றவர்களாகவும் வளர்ப்பதாக, மறைமுகமாக மருமகளை சாடுகிறாள்.

உண்மையில் ஆசாரம் என்றால் என்ன? மந்திர ஜபம் பண்ணும்போது மனது ஒருமைப்பட்டு மூச்சுமெலிந்து ஓட ஆரம்பித்தால் உடலில் காந்த மின் சக்தி (எலக்ட்ரோ மாக்னெடிசம்) பெருகும். அதனால் உள்ளடக்கப்படும் பிராண வாயுவின் இயக்கம் உடலின் கேந்திரப் பகுதிகளுக்கு விரைந்து சென்று அங்கு என்ன பாதிப்பு இருந்தாலும் அதைப் போக்கிவிடும். ஆனால் இந்த விளைவுகள் மின்சக்தி உடலில் தங்கினால் தான் நடக்கும். மணையைப் போட்டுக் கொள்வதால் மின் சக்தி பூமியை நோக்கி ஒழுகி விடாது இருக்கும். ஆனால் மற்றவர் நம்மை தொட்டால், அவர் மூலம் இந்த சக்தி தரையை நோக்கி ஓடிவிடும். இந்த அடிப்படையில் ஏற்பட்டது தான் 'என்னைத் தொடாதே' என்று சொல்லிக் கொண்டு மடியாக இருப்பது என்ற பழக்கம். பெரும்பாலும் மந்திர ஜபம் பண்ணும் நமக்கு மனது ஒருமைப்படுவதில்லை. அதனால் தற்செயலாக கூட மூச்சு மெலிவதில்லை. மின் சக்தி பெருகும் வாய்ப்பும் ஏற்படுவதில்லை. மடி என்று துணியை கம்பால் எடுத்து அணியும் சிரமம் தவிர வேறு எதுவும் கிட்டாது.

முன்னாள் முனிவர்கள் இதற்கு விதி விலக்கு. அவர்கள் மின்சக்தி மிக்கவர்கள். தண்ணீரில் சாபம் எனும் மின்சக்தியைச் செலுத்தி அழிக்கும் வல்லமை பெற்று இருந்தனர். சக்தி தரைக்கு ஒழுகாமல் இருப்பதற்காக நுனி தொங்காத பஞ்ச கச்சம் கட்டி வந்தனர். மேலை நாடுகளிலும் இந்த உணர்வு இருந்தது. அக்காலத்திய பாண்ட் சட்டைகளின் நுனிகள் மேல் நோக்கி மடிக்கப்பட்டு தைக்கப் பட்டவைகளாக இருந்தன.

மின்சக்தியை வளர்த்துக் கொள்ளாமல், கண்ணை மூடி ஜபம் செய்தாலும், மடியின் காரணமாக குழந்தையை வசைபாடுவதும் ஒரு பெரிய ஆன்மிகக் குற்றமாகும். மேலும் பூஜையிலும், மந்திர ஜபத்திலும் ஒரு மித்த வரம்பு இருக்கிறது. ஆசமனம் செய்து, பூஜைக்கோ ஜபத்திற்கோ உட்கார்ந்து விட்டால், அவை முடியும் வரை ஒரு தீட்டும் அந்த நபரை பாதிக்காது. அது சாவு தீட்டானாலும், பிறப்புத் தீட்டானாலும் அது ஜபம் முடியும் வரை அவரை அணுகாது. மனத்தில் இந்த நம்பிக்கை இல்லாதவர்களுக்கு அந்த நிலையில் ஜபமும் ஓடாது. பூஜையும் ஓடாது. எனவே பிற்காலத்தில் செயலளவில் உள்ள மடிக்கு, மனதளவில் உள்ள மடிக்கு மேலாக மதிப்பு கொடுக்கப் பட்டு இருக்கிறது. செயலளவில் மட்டும் உள்ள மடி கபடமான ஆசாரம் ஆகும்.

## பொன் மொழிகள்...

- உனது நோக்கத்தை வாளால் சாதித்துக் கொள்வதைவிட, சிரிப்பு முகத்தால் சாதித்துக் கொள்வதே சாலச் சிறந்ததாகும். — ஷேக்ஸ்பியர்.
- இளமையில் முட்டாளாகயிருப்பது பாவம். வயது வந்ததும் அப்படியிருப்பது பைத்தியக்காரத்தனம். — சீனப் பழமொழி.
- ஒரு புலி இறக்கும்போது தன் தோலை விட்டுச் செல்கிறது; ஒரு மனிதன் இறக்கும்போது தன் பெயரை விட்டுச் செல்கிறான். — ஜப்பானியப் பழமொழி.
- எப்போதும் ஒரு முட்டாளைப் போற்றிட அவனை விடப் பெரிய முட்டாள் கிடைத்து விடுகிறான். — பாயிலெவ்.
- கோபம் கொள்ளாதீர்கள்; கோபம் வாயைத் திறக்கும். ஆனால் கண்களை மூடிவிடும். — கேட்டோ.

தொகுப்பு: தேனி எம். சுப்பிரமணி.

அதற்காக ஆசாரமே தேவையில்லை என்று கொள்வது தவறு. பெண்கள் மாத விலக்கு காலங்களில் ஒதுங்கு வதில்லை. ஆனால் மந்திர அனுஷ் டானம் செய்யும் போது ஏற்படும் அதிர்வு உடலை பாதிக்கிறது. மந் திரம் விஷம் இறக்கக்கூடிய பலர் இதை அனுபவத்தில் உணர்ந்துள்ள னர். குளிக்காமல் ஜபித்தால்கூட விஷம் இறங்குவதையும், குளித்து இருந்தும் விலக்கு மூலம் ஏற்படும் அதிர்வினால், விஷம் இறங்காமல் இருப்பதையும் பலர் அறிந்துள்ளனர். வரம்பிற்கு ஊறு விளைவிக்கக் கூடிய தொடர்பு ஒதுக்கப்படவேண்டியதே.

இதற்கு மாறான அனுஷ்டானம் வாமா சாரம் எனப்படும். பரம சிவன் விஷம் குடித்தாரே என்று நாமும் விஷம் அருந்தினால் உயிருடன் இருக்க முடியாது.

சில சித்தர்கள் இன்றும் காணப் படுகின்றனர். அவர்கள் குளித்த தில்லை. பல்தேய்த்ததில்லை. அவர் களுடைய நிலையில், அவர்களுடைய அந்தராத்மாவிற்கும், சரீரத்திற்கும் யாதொரு தொடர்பும் கிடையாது. சேஷாத்ரீ சுவாமிகளைப் போல் சேற் றில் கூட உழல்வதுண்டு. ஆடை யின்றி அந்தப்புரம் வழியாகச் சென்ற ஞானியின் கையை வெட்டிய போதும் அவருக்கு ஒன்றும் ஏற்பட வில்லை. வருத்தம் தெரிவித்தபோது, வெட்டுண்ட கையை வாங்கி சரீரத் தில் ஒட்டியதும் முன்போல் ஆகி விட்டது. சித்து உள்ளவர்கள் வரம்பு களை மதிக்க வேண்டியதில்லை.

நமக்கும் அவர்களுக்கும் இடையே உள்ள தூரம் மலைக்கும் மடுவுக்கும் உள்ளது போன்றது. நாம் ஆசாரத்தை ஓரளவு மதிக்க வேண்டுமேயன்றி, ஆசாரப் பிசாசுகளாக மாறக் கூடாது. உடலை காரணமின்றி வருத்தி, பல நாள் விரதம், நீர் அருந்தாமல் இருப் பது, முள்ளின்மேல் படுப்பது இவை பயனற்றவை. பகவத் கீதையில் கண்ணன் கூறுகிறான்: 'என்னை ஏதோ திருப்தி செய்வதாக நினைத்துக் கொண்டு, உடம்பை வருத்திக் கொள் பவர்கள் உடலை மட்டுமின்றி, இந் திரியங்களையும், அவற்றை இயக்கும் என்னையுமே துன்புறுத்துகிறார்கள். அவர்கள் அசுர குணம் உள்ளவர் களே' என்கிறான்.

வரம்பிற்கு சில உதாரணங்கள்: நமது சாஸ்திரத்தில் ஞாயிறு இரவு உபவாசம். கிருஷ்ண பட்ச ஏகாதசி யில்—அன்னமின்றி பலாஹாரம்— (பழம் சாப்பிடல்). சுக்ல ஏகாதசி யில்—சுத்த உபவாசம் என்று வரை யறுக்கப்பட்டுள்ளது. வாரத்தில் ஒரு வேளை உணவு ஒழித்தல், மாதத்தில் ஒரு நாள் லகுவான உணவு என்று இருந்தால் ஜீரண உறுப்புகள் பல் லாண்டு செயல்பட முடியும். உப வாசம் இருந்ததற்கு மறுநாள் பெருந் தீனி தின்றால் உபவாச பலன் போய் விடும். வீட்டில் வாழும் போது நமது அனுஷ்டானம் மற்றவர்களுக்கு ஹிம்சை இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இப்படி வாழ முடியாதவர்கள் கானகம் ஏகி கடுந் தவம் புரிவது சிறந்தது.

★

## ஆண்டவன் சந்நதியில்...

பாரத நாட்டின் கவர்னர் ஜெனரலாக ராஜாஜி அவர்கள் பதவி யில் வீற்றிருந்தபோது திருவண்ணாமலைக்கு பாதாளலிங்க கோயிலைத் திறந்து வைப்பதற்கு வருகை புரிந்தார். அக்கோயிலைத் திறந்த பிறகு அவர் ஆற்றிய சொற்பொழிவில் குறிப்பிட்டதாவது: "நீங்கள் என்னை 'கவர்னர் ஜெனரல்' எனக் குறிப்பிட்டு இங்குப் பேசினீர்கள். வழிபாட்டுக்குரிய இடத்தில் புகுவதற்கு முன் நாம் நம் காலணிகளைக் கழற்றி வெளியில் விட்டு விடுகிறோம். நானும் அவ்வாறே இங்கு வரு வதற்கு முன் என் பதவியை கோபுர வாயிலில் களைந்து விட்டேன். இப்போது நான் இந்நாட்டில் வாழும் மிக எளிய ஒரு குடிமகன். இங்கு நாம் எவனை வழிபடுவதற்கு வந்தோமோ அவனே நம் நாதன். அவனே நம் தேவன்"

திரு. ஆர். சுப்பாராவ் — திருக்கோவலூர்.

## திருவண்ணாமலையின் தனிச் சிறப்பு

கிருதயுகத்தில் இறைவனே இங்கு அனற் பிழம்பாக நின்றார். அதனால் இது அக்னி மலையாக அமைந்தது. திரேதாயுகத்தில் மாணிக்க மலையாயிருந்தது. துவாபரயுகத்தில் தாமிர மலையாகத் திகழ்ந்தது. இப்போது கலியுகத்தில் கல் மலையாக மாறியுள்ளது. உலகில் எத்தனையோ தலங்களும் தீர்த்தங்களும் இருப்பினும், நினைத்த அளவில் சிவசாயுச்சியபர முக்தியை அளிக்க வல்லது திருவண்ணா மலையேயாகும்.

அருணாசல புராணம்.

தகவல்: ஆர். சுப்பராவ்.

# உயர்ந்த உறவு

திரு. எஸ். இராஜாராமன் பி.எஸ்ஸி., பி.எல்.,
திண்டிவனம்.

உலகில் உறவு முறைகள் பல இருந்தாலும் சகோதர உறவு ஒப்பற்ற ஒன்றாகத் திகழ்கிறது. தாய், தந்தை உறவுகளைப் போலவே பிறப்பிலிருந்து தொடரும் உறவு சகோதர உறவாகும். நம் நாட்டின் மாபெரும் காப்பியங்களான இராமாயணமும் மகாபாரதமும் சகோதர உறவின் சிறப்பினை விளக்குகின்றன.

மக்களிடையே சகோதர நேயம் பரவினால் சச்சரவுகள் ஏற்பட வழியிருக்காது. மனிதர்களிடையே உயர்ந்தவன், தாழ்ந்தவன், பணக்காரன், ஏழை, படித்தவன், படிக்காதவன் என்ற வேறுபாடுகளைக் களைவது சகோதரத்துவம் ஆகும்.

பரம்பொருளாகிய திருமால் மானிட உருக்கொண்டு இராமனாக இம்மண்ணில் அவதரித்தபின் மாந்தர்கள் படும் சுகதுக்கங்களை அடைய நேரிட்டுத் தந்தையான தசரதனின் சொற்படி நாட்டை விட்டுக் காட்டுக்குச் சென்றபோது ஆழநீர்க் கங்கையைக் கடக்க உதவியவன் குகன் என்ற வேடன். அந்த உதவியைப் பாராட்டிய இராமன் குகனை நோக்கி, "உன்னைக் கண்டு தோழமை கொள்வதற்கு முன்னே, உடன்பிறந்தவர்களாக நாங்கள் நால்வர் இருந்தோம். இப்போது எல்லையற்ற அன்புடைய உடன்பிறந்தவர்களாகிய நாம் ஐவர் ஆகிவிட்டோம்" என்று கூறினான். அதாவது இராமன், பரதன், இலக்குவன், சத்துருக்கன் ஆகிய நால்வருடன் குகனும் சேர்ந்து உடன் பிறந்தோர் ஐவர் ஆகிவிட்டதாக இராமன் கூறினான்.

"முன்பு உளெம் ஒரு நால்வேம்
முடிவு உளது என உன்னா
அன்பு உளஇனி நாம் ஓர் ஐவர்கள்
உளர் ஆனோம்".

என்பது கம்பராமாயணப் பாடலாகும். (குகப் படலம், அயோத்தியாகாண்டம், பாடல் 677).

இவ்வாறு எளிய வேடனைச் சகோதரனாகப் பாவித்து உலகில் மற்றவர்களுக்கு முன் உதாரணமாகத் திகழ்ந்தவன் இராமபிரானே ஆவான்.

சகோதர பாசம் கும்பகருணனிடமும் மிகுந்து இருந்தது. இராமன் இராவணனுடன் போர் செய்யும் முன் வீடணன் கும்பகருணனை இராமனிடம் வருமாறு வேண்டினான். சோதனையான காலத்தில் தனது அண்ணனாகிய இராவணனைப் பிரிந்து வர விரும்பாத கும்பகருணன் அதற்கு மறுத்து விட்டான். வீர உரைகள் பல பேசிய கும்பகருணன்,

"தம்பியர் இன்றி மாண்டுகிடப்பனோ
தமையன் மண்மேல்"

என்று கூறி தன் இறுதி மூச்சு வரை தமையன் இராவணனுடன் தோளோடு தோள் சேர்ந்து நின்றான். இவ்வகையில் சகோதர உறவுக்கு கும்பகருணனும் ஓர் எடுத்துக் காட்டாகத் திகழ்கிறான்.

"தம்பி உடையான் படைக்கு அஞ்சான்"

என்ற பழமொழி சகோதரர்களின் பெருமையைப் புலப்படுத்துகிறது. அண்ணனாகிய பெரியவனின் குண நலன்களும் பண்புகளும் தம்பியாக சிறியவனுக்கும் இருக்கும் என்பதை "முன் ஏர் செல்வதைப் போல் பின் ஏர் செல்லும்" என்ற பழமொழி விளக்கும்.

அண்ணனுக்குத் தொண்டு செய்வதில் போட்டிப் போட்டுக்கொண்டு முன்னின்றவர்களில் பரதனும் இலக்குவனும் ஆவார்கள். இராமன்பால் பரதன் கொண்டிருந்த அன்பு பெரியதா இலக்குவன் கொண்டிருந்த அன்பு பெரியதா என்பது பட்டிமன்ற நடுவர்களால் கூட எளிதில் தீர்மானிக்க முடியாததாக உள்ளது.

வாழ்விலும் தாழ்விலும் ஒற்றுமையோடிருந்தால் இறுதியில் வெற்றி பெறுவது உறுதி என்பதை பஞ்சபாண்டவர்களாகிய தருமன், வீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன் ஆகியோரிடையே இருந்த சகோதர உறவு விளக்குகிறது.

மானிடர்களேயன்றி தெய்வங்களிடையேயும் சகோதர உறவு போற்றத்தக்க நிலையில் உள்ளது. தினைப்புன வள்ளியைத் திருமணம் செய்து கொள்ள விரும்பினான் முருகன். ஆனால் தமையன் விநாயகர் உதவியால்தான் முருகன் வள்ளியைக் கைப்பற்ற முடிந்தது. முருகன்,

## சின்முத்திரையின் விளக்கம்

தட்சிணாமூர்த்தி குரு உருவில் இருக்கிறார். வடவால விருட்சத்தின் கீழ் அமர்ந்து தன் கை விரலால் சின்முத்திரைப் பிடித்த வண்ணமிருக்கிறார். இதுதான் ஞான முத்திரை. அவருடைய மௌனமே சுற்றியிருக்கிற சிஷ்யர்களின் சந்தேகங்களுக்கெல்லாம் பதிலளிக்கிறது.

ஆத்மஞானத்துக்கு அறிகுறி மௌனம். ஸ்தூல, சூக்ஷ்ம, ஸுஷுப்தி நிலையைக் கடந்தால்தான் ஆத்மாவை அறிய முடியும். மடக்கப்பட்ட மூன்று விரல்கள் இந்த மூன்று நிலைகளையும், நிமிர்ந்து நிற்கும் சுட்டு விரல் இந்த நிலைகளைக் கடந்து நிற்பதையும் குறிக்கும். சுட்டு விரலும் கட்டை விரலும் சேரும்போது வட்டம் உருவாகும். ஆத்மாவும் பிரும்மமும் சேர்ந்து நானும்-நீயும் ஒன்று என்று உணரும் நிலை. இதுதான் சின்முத்திரையின் தத்துவம்.

திருக்கோவலூர் — ஆர். சுப்பராவ்.

# பூக்களில் பூத்த புதுமைச் செய்திகள்!

"பூவாளே நாறு நீ பூமேக லோகமே பூநீறு நாளே வா பூ"— ' இந்தப் பாடல் வரிகளைப் படித்துப் பாருங்கள். இதில் ஓர் அதிசயம் மலர்ந்துள்ளது. இந்தப் பாடலைத் திருப்பிப் படித்துப் பாருங்கள். அந்த அதிசயம் உங்களுக்கும் புரியும். ஆம்! திருப்பிப் படித்தாலும் அதே பொருள் வரும்! இத்தகைய பாடலுக்கு தமிழில் "மாலை மாற்று" என்பார்கள்.

2) "பூக்கள்" என்பதற்குரிய ஆங்கிலச் சொல் "ஃபிளவர்ஸ்". இந்தச் சொல்லுக்குரிய உண்மையான பொருள் என்ன தெரியுமா! "எந்தப் பொருளிலும் சிறந்தது" — என்று "வெப்ஸ்டர்" என்ற ஆங்கில அகராதி கூறுகிறது.

3) ஆண்டவனை நாம் பூக்களைக்கொண்டு அர்ச்சனை செய்து வழிபாடு செய்கிறோம். அதற்கு "பூ + செய்" அதாவது "பூ செய்" என்பது இப்போது "பூஜை" அல்லது "பூசை" என்றாகி விட்டது.

4) இஸ்லாமியர்களின் வேத நூலான "குர்ஆனில்" எந்தப் பூவின் பெயரையும் காண முடியாது.

5) கிறிஸ்துவர்களின் வேத நூலான "பைபிளில்" "லில்லி" என்ற மலர் பல இடங்களில் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது.

6) "கொன்றை மலர்கள்" மாலை போன்று பூத்துக் குலுங்கும் காட்சி நம் கண்ணைக் கவரும். எனவேதான் இப்பூவின் அழகைக் கண்டு மயங்கிய ஆங்கிலேயர்கள் இதற்கு ஆங்கிலத்தில் — "லேபர் நம்" — அதாவது "பொன்மாலை" என்று பொருத்தமாகப் பெயர் சூட்டியுள்ளனர்.

7) ஆண்டவனின் வழிபாட்டிற்குரிய பூக்களை எடுத்து முகர்ந்து பார்த்த குற்றத்திற்காக "கழற்சிங்கன்" என்னும் மன்னன் தனது பட்டத்து அரசியாரின் மூக்கையும் கையையும் வெட்டி விட்டானாம்! பூக்களை மாசுபடுத்துதல் பெருங்குற்றம்.

8) அறுவை சிகிச்சையின்போது மருத்துவர்கள் இன்று தங்கள் வாயைத் துணியால் கட்டிக் கொள்வதைப் போலவே அன்று "எறிபத்த நாயனார்" என்ற அடியார், "தன் மூச்சுக் காற்றுப்பட்டால் இறைவனுக்குச் சூட வேண்டிய மலரின் தூய்மை மாசுபட்டு விடும்!' என்று கருதித் தனது வாயைத் துண்டால் கட்டிக் கொண்டே நந்தவனத்திலிருந்து தினமும் பூக்களைப் பறிப்பது வழக்கமாம்!

9) திருவாரூர் தியாகேசனுக்குத் தினமும் "செங்கழுநீர்ப்பூ" படைக்கப்பட்டு வருகிறது. "முல்லைநகைவடிவாள்" என்று தருமயோதிரப்பள்ளி அம்மனுக்கும், "முல்லை வன நாதர்" என்று சுவாமிக்கும் பெயர் சூட்டப்பட்டுள்ளது. இதிலிருந்து பூக்கள் இறைவனுடன் இரண்டறக் கலந்தவை என்று அறிய முடிகிறதல்லவா?

**தொகுத்தவர்: ஏ. நாகராஜன் — கடலூர்-1.**

விநாயகர், ஐயப்பன் ஆகிய மூன்று சகோதரர்களையும் போற்றி வணங்கும் பக்தர்கள் பல கோடியாவர்.

ஆயர்பாடியில் வளர்ந்த கண்ணன் தன் அண்ணன் பலராமனுடனும் மற்ற யாதவச் சிறுவர்களுடனும் ஆடிய ஆட்டங்களையும் செய்த குறும்புகளையும் எண்ணி எண்ணிப் புன்முறுவல் பூக்காதவர்கள் யாராகிலும் உண்டா?

சகோதர உறவின் பெருமைகளையும் நன்மைகளையும் தெய்வங்களே உணர்த்துகின்றபோதும் மாந்தர்களில் பலர் அவ்வுறவின் சிறப்புகளை அறியாதவர்களாகவே உள்ளனர். இதன் காரணமாக வீண் சண்டைகளும் வம்பு வழக்குகளும் ஏற்படுகின்றன. கணவன் மனைவி உறவு திருமணத்துக்குப் பின்தான் ஏற்படுகிறது. ஆனால் பிறப்பு முதல் இறப்பு வரை தொடரும் உறவு சகோதர உறவு ஆகும். சிறு குழந்தைகளாக இருக்கும்போதே விளையாட்டுத் தோழர்களாகவும் வழிகாட்டிகளாகவும் ஆசான்களாகவும் விளங்குபவர்கள் அண்ணன் தம்பிகளே ஆவார்கள்.

வீட்டில் சகோதர பாசம் பெருகினால் ஊரிலும் அதே உறவு பரவும். மனிதர்கள் அனைவரும் சகோதரர்களே என்ற உணர்வுமிருந்தால் உலகில் பூசல்கள் ஏற்பட வாய்ப்பில்லை. உலகில் சகோதர நேயம் பரவினால் சாதி, சமயம், நிறம், இனம், மொழி ஆகியவற்றின் காரணமாக எழும் குறுகிய எண்ணங்கள் மறைந்து மக்கள் அனைவரும் சமம் என்ற நிலை ஏற்படும். இன, மொழி, வகுப்புவாதப் பிரச்சினைகளும் அணு ஆயுதப் பயங்கரமும் உலகிற்கே சவாலாக இருக்கும் இத்தருணத்தில் நாம் அனைவரும் சகோதர நேயத்தின் சிறப்பினை உணர்ந்து உலகில் அதைப் பரப்ப முயற்சி செய்வோமாக.

*

முன்னுரை :

திருமகள் நாதனை ஸ்ரீமந் நாராயணன் இந்நிலவுலகில் ஆழ்வார்களைத் தோற்றுவித்து, அவர்களுக்கு மயர்வற மதிநலமருளினன். அவ்வாழ்வார்கள் 'உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்' என்று தாரக போஷக போக்யங்களாக எம்பெருமானையும் அவனுடைய குணங்களையும் அனுபவித்து வந்தனர். அப்படிப்பட்ட ஆழ்வார்களின் குணங்களையும் நிலைகளையும் உலகுக்கு அறிவிக்க ஆசாரியர்களையும் இந்நிலவுலகத்தே தோற்றுவித்தனன் எம்பெருமான். ஸ்ரீவைஷ்ணவ உலகில் அருள் பெற்ற நாதமுனி முதலாக—தொடக்கமாக—ஆசாரிய பரம்பரை தோன்றியுள்ளது. அவ்வாசாரிய பரம்பரையான ஹாரத்தில் (மாலையில்) நடுநாயகமாக - மாணிக்க

முன்பு திரேதாயுகத்தில் ஸ்ரீமந் நாராயணன், ஸ்ரீராமனாக அவதரித்து, திருவனந்தாழ்வானை லக்ஷ்மணனாக அவதரிப்பித்துத் தமக்கு "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி" என்கிறபடியே எல்லாவடிமைகளும் செய்வித்துக் கொண்டான். திருத்தமையனாருடைய குணங்களுக்குத் தோற்று "குணைர் தாஸ்ய முபாகத:" என்று இளைய பெருமாளான லக்ஷ்மணன் பெரிய பெருமாளான ஸ்ரீராமனுக்கு அனைத்து குற்றேவலும் செய்து வந்தார். அதன் பெருமையாலே "லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந:" என்று வால்மீகி முனிவரால் கொண்டாடப் பட்டார், இளைய பெருமாள். இப்படிப்பட்ட கைங்கர்ய ஸ்ரீயைத் தாம் (ஸ்ரீமந்நாராயணன்) பெற்று அடிமை செய்ய வேண்டுமென்ற பாரிப்பாலே

தாசரதி முறையாக ஸ்ரீவைஷ்ணவ மரபுப்படி திருவிலச்சினை முதலியவற்றைத் தம்முடைய திருத்தகப்பனாரான வாதூல அனந்த நாராயண தீக்ஷிதரிடமே பெற்றுக் கல்வி கேள்விகளிலும் நல்ல தேர்ச்சி பெற்றார். தமது மாதுலரான இராமானுஜர் திருக்கச்சியில் ஸந்யாஸம் பெற்றுப் பேரருளாளனுக்குக் கைங்கர்யம் செய்து வந்த பெருமைகளைக் கேட்டு இன்புற்று அவருக்குக் கைங்கர்யம் செய்ய வேண்டுமென்று காஞ்சிக்கு எழுந்தருளினார் தாசரதி. எம்பெருமானாரும் 'முதலியாண்டானையொழிய ஸந்யஸித்தோம்" என்று ஸந்யாஸாச்ரம ஸ்வீகாரம் செய்து கொண்டார். அதற்குச் சேர தாசரதியும் எம்பெருமானாருக்குத் திருவடி நிலையாகவும் (பாதுகை) முக்கோலாகவும் (த்ரிதண்டம்) மாறினார்.

# முதலியாண்டானின் சீர்மை

மாக—விளங்குபவர் அண்ணல் இராமானுசன்.

தோற்றம் :

இவ்விருள் தருமா ஞாலத்துள் பெரியார்க்காட்பட்டு, பெரும்பேறு பெற்று, ஞானமனுஷ்டானங்கள் நன்றாகவே யுடையரான இளையாழ்வாரென்றழைக்கப்படும் இராமானுசனுக்கு நாச்சியாரம்மை என்றும் தாமரையாளம்மை என்றும் இரு சகோதரிகள் இருந்தனர். இவர்களில் மூத்த சகோதரியான நாச்சியாரம்மைக்கும் வாதூலகுல திலகரான அனந்த நாராயண தீக்ஷிதருக்கும் திருக்குமாரராய், சித்திரை மாதப் புனர்பூச நக்ஷத்ரத்தில் தசரத சக்ரவர்த்தி திருமகனாரின் மறு அவதாரமாக தாசரதி என்னும் திருநாமத்துடன் முதலியாண்டான் அவதரித்தார்.

துவாபர யுகத்தில் கண்ணபிரானாக அவதரித்து திருவனந்தாழ்வானை பலராமனாக அவதரிப்பித்தான். ஆனால் அப்போது தான் பாரித்ததுபோல் நடைபெறக் காணாது மனத்தே மிக்க குறையுள்ளவனாய் இக்கலியுகத்தில் ஸ்ரீமந் நாராயணன் முதலில் திருவனந்தாழ்வானை இராமானுஜராக அவதரிப்பித்து, தான், பின்பு அதாவது பத்து வருஷங்களுக்குப் பிறகு, "செம்மையிராமானுச முனிக்கன்பு செய்யும் சீரிய பேறுடைய"ராக தாசரதி என்னும் தம்முடைய இயற்பெயரைக் கொண்டே "சித்திரையில் செய்ய திருவாதிரைக்" கடுத்த புனர் பூசத் திருநாளில் அவதரித்தான்.

---

திரு. கே. கே. ஏ. ரங்கராஜன,
திருப்பதி

---

மேஷே புநர்வஸு திநே
தாசரத்யம்ஸ ஸம்பவம் |
யதீந்த்ர பாதுகாபிக்யம்
வந்தே தாசரதிம் குரும் ||

என்பது இவருடைய தனியன்களில் ஒன்று இவர் பெருமையினை எடுத்தியம்பும். கூரத்தாழ்வானும் எம்பெருமானாரை அணுகி அவருக்குத் தூய்மையான பவித்ரமாகத் திகழ்ந்தார். எம்பெருமானார் திருக்கோட்டியூர் நம்பி என்னும் மஹாசாரியரிடம் திருவெட்டெழுத்தின் பொருளைக் கேட்கப் பதினெட்டு முறை அணுக, தமது நினைவை நன்கறிந்து நம்பி "தண்டும் பவித்ரமுமாக வாரும்" என்று கட்டளையிட்டனுப்பினார். அக்கட்டளைப்படி தண்டும் பவித்ரமுமான முதலியாண்டான், கூரத்தாழ்வான் ஆகியோருடன் நம்பிகளின் திருவடியில் தெண்டனிட்டபோது "தண்டும்



*ஸ்ரீவள்ளி, ஸ்ரீதெய்வானை சமேத அநுபாலி ஸ்ரீ சுப்ரமண்யசுவாமி ஆலயம்.*
*பெரிய தடாகம் — கோயமுத்தூர்.*
*ஸ்ரீஅநுமன் சஞ்சீவி மலையை இலங்கைக்கு எடுத்துச் செல்லும் வழியில் தன் தாகம் தீர இம்மலையில் உள்ள ஸ்ரீமுருகன் சன்னதியில் இறங்கி முருகனருளால் ஊற்று வரச்செய்யப்பட்டு தாகம் தணிந்து மீண்டும் புறப்பட்ட தலம்*
*திரு. எஸ். ஜி. சேஷகிரி—கோவை.*

பவித்ரமுமாகவன்றோ உம்மை வரச் சொன்னோம்" என்று கேட்க, எம்பெருமானார் நம்பிகளிடம் த்ரிதண்டமாக முதலியாண்டானையும் பவித்ரமாகக் கூரத்தாழ்வானையும் தாம் கொண்டுள்ளதை விண்ணப்பம் செய்தார்.

**தாசரதி முதலியாண்டான் என்னும் திருநாமம் பெற்றமை :**

"தென்னரங்கர் செல்வமுத்தும் திருத்தி" வைக்கக் காஞ்சியினின்றும் சென்றபோது முதலியாண்டானையும் கூரத்தாழ்வானையும் தமக்கு உசாத் துணையாக இருத்திக் கொண்டார் எம்பெருமானார். சோழ மன்னனிடமிருந்து திருவரங்கம் பெரிய கோயில் நிருவாஹத்தை வாங்கி முதலியாண்டான் என்னும் தாசரதியிடம் ஒப்படைத்தார். அச்சோழ மன்னனும் நிருவாஹத்தைக் கொடுத்து முதலியாண்டானின் சிஷ்யனாக ஆனான்.

சேனாபதியாழ்வானைப் போல கோயில் நிருவாஹத்தை நன்கு செலுத்தி வந்தார் ஆண்டான். ஸ்ரீரங்கநாதன் மிக்க மகிழ்ச்சி கொண்டு எம்பெருமானாரிடம் "உமக்குப் பாதுகையான தாசரதி நம் வீட்டை ஆராய்க் கடவர்; நீர் நம் தர்சனத்தில் களையறுத்து "எம்பெருமானார் தரிசனமே ஸர்வோத்க்ருஷ்டம்" என்று நாலு திசையிலும் "ஜயஸ்தம்பம் நாட்டிவாரும்" என்று விடை ஸாதித்து முதலியாண்டானுக்குச் செங்கோல் வரிசையும் பிரஸாதித் தருளினார். இப்படி நியமனம் பெற்ற முதலியாண்டானும் குறட்டிலே இருந்து திருமேனி உபசாரத்தையும், ஸந்நிதியிலே இருந்து திருப்பவள வுபசாரங்களையும் ஆராய்ந்து கொண்டு, அனைத்தழகும் கண்டருளப் பண்ணிக் கொண்டிருந்தார். திக்விஜயம் பண்ணி உடையவர் திரும்பி எழுந்தருளிய போது, முதலியாண்டான் திருவரங்கச் செல்வத்தைச் சிந்தாமே மங்காமே த்விகுணமாக வர்த்திப்பித்துக் கொண்டு (ஒரு குறையும் வீணும் இல்லாமல் இருமடங்காக வளர்த்து) அனைத்தழகும் நடத்தி வைத்தபடியைக் கண்டு உகந்து, அவரையே ஸ்ரீகார்யத்தில் தொடரும்படி நியமித்தருளினார்.—கோயிலொழுகு.

"லௌகிகே ஸமயாசாரே
க்ருதகல்போ விசாரத:"

என்னும் ஸ்ரீராமாயண வசனப்படி லௌகிக ஸாமர்த்யமும் சிறப்புறப் பொருந்தியிருந்ததனால் திவ்யாலய நிர்வாஹ கைங்கர்ய துரந்தரத்வம் இவருக்குப் பிராப்தமாயிற்று. சேனை முதலியார் போல இருந்து அரங்கன் கைங்கர்யத்தை ஆண்டு வந்த பெருமையினாலேயே இவர்க்கு முதலியாண்டானென்று திருநாமமாயிற்றென்பர் பெரியோர்.

**முதலியாண்டானின் பாரதந்த்ரியம் :**

ஸ்ரீவைஷ்ணவ மரபில் பாரதந்த்ரியம் என்னும் மனப்பக்குவம் மிகவும் முக்கியமானது. ஆசாரியனிட்ட வழக்காகத் தான் கைங்கர்யம் செய்வதே அப்பாரதந்த்ரியம் ஆகும். இதைத் தம்முடைய வாழ்க்கையில் செய்முறையில் எடுத்துக் காட்டியுள்ளார் முதலியாண்டான்.

அக்காலத்தில் பெண்ணுக்குத் திருமணம் செய்து புக்ககத்திற்கு அனுப்பும்போது ஒரு பணிப்பெண்ணைச் சீதனமாக உடன் அனுப்புவது வழக்கமாக இருந்துள்ளது. திருவரங்கத்திலிருக்கும் பெரிய நம்பிகளின் திருமகள் அத்துழாயம்மையை அவ்வாறு அனுப்ப நம்பிகள் வசதி பெற்றிருக்கவில்லை. ஒரு நாள் அத்துழாய் தன் மாமியாரைக் காவிரியில் நீராட உடன் வருமாறு வேண்ட "உன்

பிறந்தகத்திலிருந்து அழைத்து வந்துள்ள சீதன வெள்ளாட்டியை அழைத்துப்போ'' என்று சொல்ல, அத்துழாய் அதைத் தன் தகப்பனுரிடம் சொல்ல, அதற்குப் பெரிய நம்பி வருத்தமடைந்து "ஜீயரிடம் (எம்பெருமானுர்) சென்று கேள்'' என்று காட்டிவிட அத்துழாய் தன் அண்ணனுக மதித்திருந்த ஜீயரிடம் முறையிட்டாள். ஜீயரும் தமக்கணுக்கராயிருந்த முதலியாண்டானை அழைத்துக் காட்டி "இவரை உமது சீதன வெள்ளாட்டியாகக் கொண்டு போவீர்'' என்று அனுப்பினர். முதலியாண்டானும் மறுமொழி கூருது மன நிறைவுடன் அத்துழாயுடன் சென்று ஒரு பணிப்பெண் செய்ய வேண்டிய பணிகளைச் செய்து வந்தார். நாளடைவில் அத்துழாயின் புக்ககத்தினர் முதலியாண்டானின் பெருமையை உணர்ந்து பணிப்பெண் உத்யோகத்தைவிட்டு விட்டுத் தங்களை உஜ்ஜீவிக்கச் செய்யுமாறு அவர்கள் வேண்டியும், தம்முடைய ஆசார்யரான ஜீயரின் திருவுள்ளத்தைத் தெரிந்த கொண்ட பிறகே எம்பெருமானுரால் மீண்டும் அழைக்கப்பட்டு அவ்வேலையிலிருந்து விடுபட்டுச் சென்ருர். இவ்வாறு ஆசாரியனிட்ட வழக்காக முதலியாண்டான் தம் வாழ்நாள் முழுவதுமிருந்தார்.

முதலியாண்டானின் ஏற்றம் :

முதலியாண்டானின் பெருமையை, எம்பெருமானுரைத் தவிர வேறு தெய்வமறியாத வடுகநம்பி என்னும் அந்தரங்க சிஷ்யரின் அனுஷ்டானம் கொண்டு அறியலாம். வடுகநம்பியின் உறவினர்களில் சிலர்—தகுந்த ஆசார்யர்களிடம் திருவிலச்சினை பெருதவர்கள் — அவருடைய திருமாளிகைக்கு வந்து சென்றனர். அவர்கள் ஆண்ட—உபயோகித்த—பாத்திரங்களையெல்லாம் வீசியெறிந்து விட்டுத் திருமாளிகையைத் தூய்மை செய்து முதலியாண்டான் திருமாளிகையில் ஆண்டு கழித்தவைகளாய், புழக்கடையில் கிடந்த பாத்திரங்களைக் கொண்டு வந்து காரியம் கொண்டு மன நிம்மதி பெற்றதாக குருபரம்பரையின்மூலம் அறியப்படுகிறது. ஸதாசார்ய ஸம்பந்தம் பெற்ற முதலியாண்டான் ஆண்டு கழிந்தவைகள் தூய்மை விளைவிப்பவை என்பது வடுக நம்பிகளின் அசைக்க முடியாத நம்பிக்கை.

அர்ச்சாவதாரத்தில் ஈடுபாடு - நிர்வாஹம் :

முதலியாண்டான் கல்வி கேள்விகளில் கரைகண்டவர். திவ்ய ப்ரபந்தங்களிலும் அர்ச்சாவதாரத்திலும் மிக்க ஈடுபாடுடையவர். பகவத் விஷய வியாக்கியானங்களில் முதலியாண்டானின் நிர்வாஹம், ஐதிஹ்யம் முதலானவை ஆங்காங்கு எடுத்தாளப்படுகின்றன. விரிப்பிற்பெருகுமாதலான் ஓரிரு உதாஹரணம் மட்டும் இங்குக் காண்போம்.

1. முதலியாண்டானுக்கு அர்ச்சாவதாரத்திலே ஈடுபாடு மிகவும் அதிகம். தன் திருவுள்ளத்தை "நெஞ்சினுல் நினைப்பான்யவன் அவனும் நீள்கடல் வண்ணனே'' (திருவாய்மொழி 3-6-9) என்னும் வரியின் மூலம் தெளிவுபடுத்துகிருர். அதாவது "குணு திக்யத்தாலே வஸ்துவுக்கு ப்ராதான்யமாகையாலே குணு திக்யமுள்ள அர்ச்சாவதாரமே ப்ரதானம்'' என்பதாகும்.

2. "ஈதேயானுன்னைக் கொள்வதெஞ்ஞான்றும்'' என்னும் திருவாய்

## அட்டையில்....

பெரும்பாலும் வாழ்க்கையில் முன்னேறிய முன்னேற—விரும்பும் ஒவ்வொருவரும் தங்கள் வாழ்க்கையில் ஒருவரை தங்கள் இலட்சிய நாயகனுகக் கொண்டு விளங்குவதைக் காணலாம். அவ் இலட்சிய நாயகன் சரித்திரத்திலோ,அரசியலிலோ, இலக்கியத்திலோ ஏன் சமயத்திலோ திகழ்ந்திடக்காணலாம். இவற்றுள் சமயம் காட்டிடும் நாயகர்கள், மற்றைய துறைகள் வழங்கும் புகழ், செல்வம் என்பவைமட்டுமன்றித் தனி மனித மேம்பாட்டினையும், அதன் மூலம் சமுதாய சீர்மைக்கும் வழி செய்திடும் வழிகாட்டிகளாக அமைந்திருக்கின்றனர். இத்தகு பெருமைமிகு சமயம் தந்திட்ட இலட்சிய நாயகர்களில் சமய உணர்வு பொலிந்து விளங்கும் இராமகாதை தந்திட்ட பாத்திரங்களில் அனுமன் எல்லா வகைகளிலும் தனித்துத் திகழ்கின்ருன். இராம என்னும் மந்திரப் பொருளை அறிய சீதையெனும் மந்திரத்தினை விளக்கும் ஆசார்யனுக அனுமன் விளங்கினுன். வள்ளுவன் வழங்கிட்ட வாழ்க்கை இலக்கணங்களுக்கு ஒரு நடமாடும் இலக்கியமாகத் திகழும் வாயு மைந்தன் நினைவாற்றல், மதிநுட்பம், விழிப்புணர்வு, முயற்சி, மனவுறுதி, உடல் வலிமை, காதல், பணிவு, புலனடக்கம் ஆகிய மனிதனின் உள்ளழகுக்குத் தேவையான பண்புக்களுக்கு உறைவிடமாக விளங்கி இன்றைய இளைஞர்கட்கு ஓர் இலட்சிய நாயகனுக விளங்குகின்ருர்.

இத்தகு ஆற்றல் மிகு அனுமனை-தாஸரதியின் முதல் தாஸனுன அனுமனை ஸர்வ சக்திகளின் சமஷ்டியாக உபாசனை செய்த வால்மீகியின் வழியில் நின்று, ஐம்பூதங்களின் ஒருமித்த சக்தியான இவ் 'பஞ்சமுக' அனுமனை சிந்தையாலும், செய்கையாலும் பணிந்தேத்துவோமாக.

மொழி (2-9-2) ஈட்டில் ஓர் ஐதிஹ்ய ஸ்ரீஸூக்தியுள்ளது. அதாவது "எம்பாருக்கு ஆண்டானருளிச் செய்த வார்த்தையை ஸ்மரிப்பது; அதாவது "ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டு பேர் கை கொடுத்தால் எடுக்குமவர்களுக்கு மெளிதாய் ஏறுமவனுக்கு மெளிதாயிருக்குமிறே; அப்படியாகிறது என்று".

இதன் விவரணம் :

முதலியாண்டான் திருநாராயண புரத்தில் இருந்தபோது முதலியாண்டானின் சிஷ்யர் ஒருவர் ஸ்ரீரங்கத்தே வந்து எம்பாருக்குக் கைங்கர்யம் செய்து வந்தார். ஒரு ஸமயம் எம்பார் ஸ்ரீவைஷ்ணவர் சிலருக்குத் திருவிலச்சினை ஸாதிக்க விருக்கையில் மேற்படி முதலியாண்டானின் சிஷ்யர் தமக்கும் ஸாதிக்கும்படி வேண்ட, எம்பார் 'உமக்கு விசேஷ ஸம்பந்த முண்டோ?' என்ன, "தேவரீருடைய ஸம்பந்தமே ஸம்பந்தம்" என்று விண்ணப்பித்த வளவிலே எம்பார் இவர் முதலியாண்டானுடைய திருவடி ஸம்பந்தம் பெற்றவர் என்று அறியாமல் இவருக்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்து வைத்து இவரிடம் கைங்கர்யங்களைக் கொண்டார். ஆண்டான் திருநாராயணபுரத்திலிருந்து திரும்ப, இவர் முதலியாண்டானை ஸேவித்து அவரிடம் முன் போலவே கைங்கர்யம் செய்து வந்தமையை எம்பார் கண்டு, ஆண்டான் பக்கலிலே எழுந்தருளிக் 'கனக்க அபசாரப்பட்டேன்' என்று அருளிச் செய்ய, எம்பாருடைய திருவுள்ளத்தின் கலக்கத்தை அறிந்து "ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டு பேர் கை கொடுத்தால் எடுக்குமவர்களுக்கு எளிதாய் ஏறுமவனுக்கும் எளிதாயிருக்குமிறே; அப்படியே யாகிறது" என்றருளிச் செய்தார் ஆண்டான். அதாவது "ஸம்ஸார ஸாகரத்திலே அழுந்தினவனுக்கு அடியேனும் கை கொடுத்து தேவரீரும் கை கொடுத்தால் என்ன குறை? தேவரீர் தவறாக ஒன்றும் செய்து விடவில்லையே; எதற்காக க்லேசிப்பது? என்பது முதலியாண்டானின் மதுரமான திருவாக்கின் கருத்து.

முதலியாண்டான் ஸ்ரீராமாயணத்திற்கு ஸ்வாபதேசார்த்தமாக சில வார்த்தைகள் அருளிச் செய்துள்ளார். அவற்றில் சிலவற்றை இங்கே காண்க.

1. பிராட்டிக்குச் சிறையிருப்புப் போல ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸம்ஸாரத்திலிருப்பு.

2. பிராட்டி இளைய பெருமாள் விஷயத்தில் அபசாரப்பட்டு உடனே பெருமாளைப் பிரிய நேர்ந்தது போல சேதநர்களுக்கு பாகவதாபசாரம் எம்பெருமான் திருவடி ஸம்பந்தத்தை விலகப் பண்ணும்.

3. பிராட்டிக்கு அசோக வனம் போலே இவர்களுக்கு ப்ரக்ருதி ஸம்பந்தரூபமான தேஹம்.

4. பிராட்டிக்கு அரக்கிகளின் ஸஹவாஸம் போலே இவர்களுக்குப் புத்ர களத்ராதிகளின் ஸஹவாஸம்.

5. பிராட்டிக்கு மாரீச மாயா மிருகக் காட்சி போலே இவர்களுக்குப் "பாவியேனைப் பல நீ காட்டிப்படுப்பாயோ" என்னும்படியான விஷயங்களின் காட்சி.

இங்ஙனே இன்னும் பல வார்த்தைகள் உள. விரிப்பிற்பெருகும். முதலியாண்டான் பணித்த வார்த்தைகளைப் பெரும்பாலும் பின்பற்றி, வேதாந்த வாசிரியர் தம் ஸங்கல்ப ஸூர்யோதயத்தில்

தர்ப்போதக்ரத ஸேந்த்ரியாநந மனோ
நக்தஞ்சராநிஷ்டிதே
தேஹேஸ்மிந் பவஸிந்துநா பரிகதே
தீநாம் தஸாமாஸ்தித:
அத்யத்வே ஹனுமத் ஸமேந குருணா
ப்ரக்யாபிதார்த்தபுமாந்
லங்காருத்த விதேஹராஜ தநயா
ந்யாயேந லாலப்யதே

என்கிறார் இதன் பொருளாவது—

செவி வாய் கண் மூக்கு உடல் முதலான பத்து இந்திரியங்களைத் தன் வசத்தில் கொண்ட மனம்—பத்துத் தலைகளைக் கொண்ட இராவணன் இலங்கையில் ஆட்சி செலுத்துவது போல ஜீவாத்மாவின் சரீரத்தில் ஆட்சி செலுத்துகிறது. அவன் இலங்கையில் ஸீதையைச் சிறை வைத்தது போல மனமும் ஜீவாத்மாவை இச்சரீரத்தைவிட்டுப் போகாதபடி சிறை வைத்திருக்கிறது. இராவணனால் இலங்கையில் அடைபட்ட ஸீதை வருத்தப்பட்டது போல மனத்தினால் ஜீவனும் சரீரத்தில் அடைபட்டு வருத்தமடைகிறான். இங்ஙனம் சில நாள் சென்ற பிறகு ஒரு நாள் திடீரென்று ஹநுமான் வந்து "வருந்த வேண்டாம், உமக்கு உய்வு உண்டு, பெருமாள் வந்து உம்மைக் காப்பாற்றுவர்" என்று அறிய வேண்டிய விஷயங்களைச் ஸீதைக்குத் தெரிவித்தது போல, ஆசாரியர் வந்து இந்த ஜீவாத்மாவுக்கு"வருந்த வேண்டாம்; உனக்கு இச்சரீரம் விடுபடும், பெருமாள் உன்னைக் காப்பாற்றுவார்" என்று கூறி அறிய வேண்டிய அர்த்தங்களை உபதேசிக்கிறார். பிறகு ஸீதை தெளிந்து தன்னை நலிந்த இராவணனை அலட்சியப்படுத்திப் பேசியது போல, இந்த ஜீவாத்மாவும் தெளிந்து தன்னை இச்சரீரத்தில் அடைத்த தனது மனத்தே அலட்சியப் படுத்திப் பேசுகிறான்" என்றவாறு.

வேதாந்தவாசிரியர் தம் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஆண்டான் வார்த்தையாக அருளிச் செய்த தொன்றுண்டு. அதாவது "ஒரு மலையில் நின்றும் ஒரு மலையில் தாவும் ஸிம்ஹ சரீரத்தில் ஜந்துக்களைப் போலே பாஷ்யகாரர் ஸம்ஸாரலங்கநம் பண்ண அவரோடுண்டான குடல் துடக்காலே நாம் உத்தீர்ண ராவுதோமென்று முதலியாண்டானருளிச் செய்த பாசுரம்" என்பது.

முடிவுரை :

இவ்வாறு எம்பெருமானாருக்குப் பாதுகையாக இருந்து, பாரதந்த்ரியமே வடிவாகிக் கல்வி கேள்விகளில் மிகவும் சீர்மை பெற்று விளங்கியவர் முதலியாண்டான்.

பாதுகே யதிராஜஸ்ய
கதயந்தி யதாக்யயா
தஸ்ய தாசரதே: பாதௌ
சிரஸா தாரயாம்யஹம் ||

(யதிராஜரான எம்பெருமானாருடைய திருவடி நிலைகளை யாருடைய பெயரால் பெரியோர்கள் குறிப்பிடுகிறார்களோ, அத்தகைய - தாசரதியென்னும் முதலியாண்டானுடைய திருவடிகளை அடியேன் சிரஸ்ஸினால் தரிக்கிறேன்).

என்பது முக்கியமான தனியன். ★

# அவலக்ஷணம்

திரு. வெ. இராகவன் — பள்ளத்தூர்.

'அரிதரிது மானிடனாய்ப் பிறத்தலரிது', 'கிடைத்தற்கரிய மானிடப் பிறவி' என்றெல்லாம் புகழ்ந்து பேசப்படுவது இம்மானுடப் பிறவி. 'ஊனிடைச் சுவர் வைத்தென்பு தூண்நாட்டி உரோமம் வேய்ந்து ஒன்பது வாசல் தானுடைக் குரம்பை'' (பெரிய திரு. 1-6-9) என்றவாறு சரீரத்திலுள்ள எலும்புகள், நடப்பட்ட தூண்கள். இரத்தத்தோடு கூடிய மாமிச பிண்டங்கள், இடையே எழுப்பப்பட்ட சுவர்; உரோமங்கள், ஓலையாய் வேயப்பட்ட கூரை; ஒன்பது துவாரங்களும் ஒன்பது வாசல்கள். இவ்வாறு ஒரு குடிசைக்கு ஒப்பானதே இம்மானிட சரீரம்!

''வேதநூல் பிராயம் நூறு'' (திருமாலை) என வேதம் உச்சவரம்பான 'நூறு ஆண்டுகளே' ஆயுள் என அறுதியிட்டது. நூறாண்டு காலம் வாழ்ந்திருந்தோர்களை விரல்விட்டு எண்ணி விடலாம். கருவிலே மரிப்பதும், பிறந்தவுடன் இறப்பதும், இளமையிலே மாள்வதும் உண்டு. ஆயுளில் பாதி உறக்கத்தில் சென்று விடுகிறது. மிகுந்ததில், உண்ண உறங்க என்று அறியாது, தன் தாயின் தயவிலேயே அன்றாடக் காரியங்களையும் நடத்திக்கொள்ளும்படியால் குழந்தைப் பருவம் ஆயிற்று. துள்ளியோடும் கன்றே போல், நல்லது கெட்டதையறியாது, சொன்னாலும் புரிந்து கொள்ளமாட்டாது விளையாட்டிலே ஓடி விடுகிறது பாலப் பருவம். சிற்றின்ப கேளிக்கையிலே கழிந்து விடும் யௌவனப் பருவம். ''பண்டுகாமரானவாறும் பாவையர் வாயமுதம், உண்டவாறும் வாழ்ந்தவாறும் ஒக்கவுரைத் திருமி, தண்டுகாலாவூன்றியூன்றித் தள்ளி நடப்ப'' (பெரிய திரு. 1.3.4) கோலூன்றித் தள்ளாடித் தள்ளாடி நடக்கும் நிலையிலும் யௌவனத்தில் அனுபவித்த சிற்றின்ப நுகர்ச்சிகளையெல்லாம் நினைந்து பெருமையோடு பிறரிடம் சொல்லி, சென்ற கால சிந்தனையிலும், நிகழ்கால சிந்தனையிலும் மூழ்கி வாய் வெறுவி, மூப்பில் காலத்தை ஓட்டுவர். எம்பெருமானைச் சிந்திக்க நேரம் எங்கே கிடைக்கிறது இவர்களுக்கு? இக்கருத்தினை நன்கு விளக்கும் ஓர் வடமொழிக் கவிதை: (பஜகோவிந்தம்.7)

''பாலஸ் தாவத் தருணீ ஸக்தஸ்: |
த்ருணஸ் தாவத் சிந்தா ஸக்த:
வ்ருத்தஸ் தாவத் சிந்தா ஸக்த:
பரே ப்ருஹ்மணி கோபி ந ஸக்த: ||

இவ்வாறான மானிடப் பிறவி போற்றுதற்குரியது என்பது எவ்வாறு பொருந்தும்? ''அவத்தமே பிறவிதந்தாய்'' (திருமாலை 31) என இம்மானிடப் பிறவியிலே தன் விருப்பமின்மையைத் தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிச் செய்கிறார். பெற்ற பிறவியைச் செம்மையாக்கிக் கொள்ளவும் முனைகிறார்.

''பச்சைமாமலைபோல்மேனி பவள
வாய்க் கமலச் செங்கண்
அச்சுதா! அமரரேறே! ஆயர்தம்
கொழுந்தே! என்றும்
இச்சுவை தவிர'' (திருமாலை-2).

என (1) பச்சைமாமலைபோல் மேனி, (2) பவளவாய், (3) கமலச்செங்கண், (4) அச்சுதா, (5) அமரரேறே, (6) ஆயர்தம் கொழுந்தே என்று அருசுவை உண்டி உண்பாரைப் போல் அவர் திருநாமங்களைப் பாடி பரவசமாகிறார்.

''கதிரவன் குணதிசைச் சிகரம்
வந்தணைந்தான்
கனையிருளகன்றது காலையம
பொழுதாய்''
(திருப்பள்ளியெழுச்சி 1)

என்றவாறு அடியார்களுக்குச் சூரியன் கீழ்வானத்தில் தோன்றியது எம்பெருமானுக்கு அடிமை புரியும் நேரம் வந்தாயிற்று என மகிழ்ச்சியைத் தரும். இம்மானிடப் பிறவியோ, சூரியன் உதித்து விட்டால், பொருள் தேடும் நேரம் வந்தாயிற்று என்றும், சூரியன் மலை வாயில் வீழ்ந்ததும் மனைவியோடு ரமிக்கும் நேரம் வந்தது என மகிழ்ந்திருக்கும். தேன் கூட்டின் மீது அப்பிக் கிடக்கும் ஈக்கள் போல் நாம் செய்து போன கருமங்கள் எம்பெருமானைச் சிந்திக்க விடாது ''மதியிலா மானிடங்காள்'' (திருமாலை 9) என்னும்படி ஞானசூன்யமாக்கி விட்டனவே!

நாட்டிலே இன்றும், 'அவலக்ஷணமே', 'எமனேறும்பரியே' 'கூரையில்லா வீடே' என்றும் அவச் சொற்கள் நடையாடுகின்றன. சற்றே சிந்தித்தால் இவற்றுள்ளும் 'நல்வாழ்வுக்கான நல்லுரைகள்' பொதிந்து கிடப்பது புலனாகும். 'அவலக்ஷணம்' என்றும் சொல்லை 'அவ' என்னும் 'லக்ஷணம்' என்னும் இரு சொற்களாகப் பிரிப்போம். 'அவ' என்னும் சொல்லில் 'அ', 'வ' என்னும் இரண்டு எழுத்துக்களில் 'அ' என்பது எட்டு (8) என்னும் எண்ணைக் குறிக்கும் 'வ' என்னும் எழுத்தோ ஒன்றை நான்கு பாகமாக்கி அதில் ஒன்றை 'கால்' (¼) என்று சொல்லுகிறோம். ஆக முடிவு 'எட்டேகால்' என்பது நம் பிறப்பு எட்டேகாலில் ஆரம்பித்து எட்டேகாலில் முடிகிறது என்பதே! பிறந்த குழந்தைக்கு (கைகளுக்கும் கால்களுக்கு வாசி தெரியாது) கால்

## பொன்மொழி

இயந்திர நுட்பமறிந்த நிபுணர் இயந்திரத்தை ஓட்டுவது போலவும், மருந்துக் கடையில் மருந்துகள் அடுக்கப்பட்டிருக்கும் வரிசை, இடம், விலை, இவைகளையறிந்தவர் அம்மருந்துகளை விற்பனை செய்வது போலவும், தத்துவமறிந்தோர்கள் உலகில் தெளிவாக வாழ்கிறார்கள். மற்றவர்களையும் வாழ வைக்கிறார்கள்.

— அன்பொழி.

தொகுப்பு: தேனி எம். சுப்பிரமணி.

கள் நான்கு; தாயும் தகப்பனுக்கும் கால்கள் நான்கு; ஆகவே பிறக்கும் போது எட்டுக் கால்கள்! அந்திமத்திலோ கொண்டு போக வந்த யமனுக்கு 2 கால்கள்; அவன் வாகனமாகிய எருமைக்கு கால்கள் நான்கு; கொண்டு செல்லப்படுபவனுக்கு 2 கால்கள்; ஆக எட்டுக் கால்கள். இதுதான் எட்டேகால் லக்ஷணம்! இதுதான் அவலக்ஷணம்!

அவலக்ஷணமான இப்பிறவியை லக்ஷணமாக்கிக்கொள்ள 'அவ' என்னும் சொல்லிலேயே வழி கிடைக்கும். 'அ' என்பது தமிழில் முதல் எழுத்தாகிறது. மேலும் எட்டு என்னும் எண்ணையும் குறிக்கிறது. "அகர முதலெழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு" (திருக்குறள் 1) என அது அகரவாச்யனை திருமாலைக் குறிக்கும் எண்ணுணை நிலையில் எட்டெழுத்துக்குரியனை திருமாலையே குறிக்கும். 'வ' என்பது எண்ணுன நிலையில் கால் என்பதைக் குறிக்கும். மேலும் கால் என்பது நடக்கவும், ஓடவும், ஆடவும் உதவும்படியான கால் என்னும் அவயத்தையும் குறிக்கும். இங்கு அது சிறப்பாக திருமாலின் திருவடியைக் குறிக்கும். இதனுல் தேறுவதோ, திருமாலின் 'எட்டெழுத்தான திருமந்திரம்' அதனைச் சொல்லி அவன் திருவடியைப் பற்றுவதுதான் 'அவலக்ஷண வாழ்வை' லக்ஷணமாக்கிக் கொள்ள வழியாகிறது என்பதே.

குடிசைக்குக் கூரை பிரதானம்; கூரையில்லா வீட்டைக் குட்டிச் சுவர் என்போம். இம்மானிடப் பிறப்பும் குடிசைக்கு ஒப்பாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆறிவு படைத்த மானுடனுக்குத் தலையே பிரதானம். தலையில்லா சரீரத்தை முண்டம் என்கிறோம். தலையை இங்குக் குறிப்பிடுவது ஞானத்தைப் பற்றியதால் ஆக ஞானமில்லாதவன் முண்டத்துக்குச் சமானம். ஞானம் தான் முன் கூறியது போல் "எட்டே காால் பிறவிக்கு எட்டே காலில் முடிவு" என்பதும். அவலக்ஷணமான அப்பிறப்பை லக்ஷணமாக்கிக் கொள்ள 'அவன்' பேரைச் சொல்லி அவன் கால்களை விடாது பற்றுதல் என்பதே.

"பேசுமின் திருநாம மெட்டெழுத்தும் சொல்லி நின்று" (பெரிய திருமொ. 1.8.9) என எல்லோராலும் சொல்லத்தக்கதான எட்டெழுத்தான திருமந்திரத்தை விடாது சொல்லி அவன் திருவடிபற்றுதல் சாலச் சிறந்தது. இன்பம் பயக்கும் வியாக்யான சக்ரவர்த்தி பெரியவாச்சான்பிள்ளையருளிய சூக்தி கேண்மின்: "அதிகார ஸம்பந்தி வேண்டாவிறே பெற்றதாய் பேர் சொல்லுவார்க்கு; அப்படியே இடர்வந்தபோது எல்லோருமொக்கச் சொல்லிக் கொடு போரக் கடவதான இனிய திருநாமமான எட்டெழுத்தையும் சொல்லி நின்று" என்பதாம்.

கோபாலா! கிருஷ்ணு! என பெயரைச் சொன்னுல் மறுபிறப்பின்றிச் செய்வான் என்னும் கருத்தைக் கொண்ட அழகான ஓர் வடமொழிக் கவிதையைக் காண்போம்.

"கோபால இதிக்ருஷ்ண! த்வம் ப்ரசுர க்ஷீர வாங்க்ஷயா |
ச்ரிதோ மாத்ருஸ் தநக்ஷீர மப்ய லப்யம் த்வயா க்ருதம் ||

'நிறைப் பசுக்களையுடைய உன்னை, 'கோபாலா! கிருஷ்ணு' வெனக் கூப்பிட்டால் நிறையப் பால் கிடைக்கும்; அதனைக் குடிக்கலாம் எனவிருந்த எனக்கு இது நாள் வரை கிடைத்து வந்த தாய்ப் பாலையும் கிடைக்காது வாறு செய்து விட்டாயே'! என்பதே பொருள். உள்ளுறைப் பொருளோ மறுபிறவியெடுத்துக் குழந்தையாய் இருந்துதானே தாய்ப்பால் அருந்த முடியும். பிறவியே இல்லாதபோது தாய்ப்பால் எதற்கு?

வைகுந்தத்தில் ஸ்ரீமந் நாராயணன் தன் பிரிய நாயகிகள் உடனமர்ந்திருக்க நித்ய சூரிகளும், நித்ய முக்தர்களும் புடைசூழத் தன் மேன்மை பிரகாசிக்கத் திருவோலக்கம் இருப்பதையும் கணிசியாது, மண்ணுலகில் கன்றுகளை மேய்ப்பதில் உவகைக் கொண்டு கண்ணனுய்த் தோன்றி இன்புறுகிறுன். பசுக்களோ தானுகவே மேய்ச்சல் தரை கண்டும், நீர் நிலை கண்டும் தன் வயிற்றை நிரப்பிக் கொள்ளும். தானுகவே மேய்ச்சல் தரை கண்டு மேயவும், நீர் நிலை கண்டு அஞ்சும் நிலையில் கன்றுகளை ஓட்டிச் சென்று நீர்நிலையில் இறங்கித் தானே கன்றுகள் தண்ணீர் குடிப்பது போல் கைகளைப் பின்புறம் கட்டிக்கொண்டு குனிந்து தண்ணீர் குடித்து அவற்றையும் அவ்வாறே பழக்குவனும். ஆகவே "கற்றினம் மேய்த்த எந்தை கழலிணை பணிமின் நீரே" (திருமாலை 9) என்றவாறு கன்று மேய்த்து கந்தகண்ணனின்கழலிணைப் பற்றி உய்வோம் நாம். 卐

# செய்திச் சுருக்கம்



## 484-வது நினைவு நாள் விழா

திருப்பதியில் தி. தி. தே. அன்ன மாச்சார்யா மந்திரத்தில், 15-ம் நூற்றுண்டில் வாழ்ந்த தெலுங்குக் கவிஞரும், திருவேங்கடப் பக்தருமான ஸ்ரீ தாள்ளபாக்கா அன்னமாச்சார்யாவின் 484-வது நினைவு நாள் விழா வெகு விமர்சையாக 26-3-87 முதல் 1-4-87 வரை கொண்டாடப்பட்டது. 26-3-87 அன்று ஸ்ரீ அன்னமய்யாவின் திருவுருவப்படம் நகரில் சில முக்கிய வீதிகளில் திருவீதி வலம் கொண்டுச் செல்லப்பட்டது. அன்று மாலை நடைபெற்ற துவககநாள் விழாவின்போது, தி. தி. தே. மேலாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா, தி தி.தே. முன்னுள் செயலாட்சித்தலைவர் திரு எஸ். லக்ஷ்மி நாராயணு ஐ.ஏ.எஸ்., ஸ்ரீ அன்னமாச்சார்யா திட்டக் குழுவின் ஒத்திசைவாளர் டாக்டர். மேடசானி மோகன் மற்றும் பலரும் பங்கேற்று உரையாற்றினர். இவ்விழா நாட்களின் காலை வேளைகளில் அன்னமய்யா பாடல்கள் பற்றிய கருத்தாய்வுகளும், மாலை வேளைகளில் இன்னிசைக் கச்சேரிகளும் நடைபெற்றன. திருவாளர்கள் ஜி. பாலகிருஷ்ண பிரஸாத், நேதுநூரி கிருஷ்ணமூர்த்தி, எஸ். ஆர். ஜானகிராமன், டி. பசுபதி, புதுக்கோட்டை ராமனுதன், மல்லிக், திருமதி. சேலம் ஜெயலக்ஷ்மி, திருச்சி சகோதரிகள் ஆகியோர் தங்கள் இன்னிசைக் கச்சேரிகள் மூலம் நகர மக்களுக்கு பெரும் இசை விருந்தினை அளித்தனர். இறுதி நாளன்ற நடைபெற்ற விழாவில் தி. தி. தே. இணை செயலாட்சித் தலைவர் திரு. சக்ரதார ராவ் அவர்கள் இது போன்ற இசை விழாக்களை, திருமலைக்கு வரும் யாத்திரிகர்களும் பயனுறும் வகையில் திருமலையிலும் நடத்த வேண்டும் என்று தம்முரையில் குறிப்பிட்டு, தி. தி. தே. நடத்திய அன்னமய்யா இசைப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கினுர்.

## நூற்றுண்டு விழா

திருப்பதியில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா கீழ்த்திசைக் கல்லூரியின் நூற்றுண்டு விழா விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. 1884 - ஆம் ஆண்டு, திருமலைக்கோயிலின் நிருவாகியாக இருந்த 'பகவான்தாஸ்ஜி மஹந்த்' காலத்தில் அப்போதைய சென்னை மாகாண ஆளுநர் திரு. கிரேண்ட் டஃப் ஆதரவில் ஒரு வேத பாடசாலையாக இக்கல்லூரி துவக்கப்பட்டது. பின் 1909-இல் இவ்வேத பாடசாலையில் ஆகம சாஸ்திரங்களும், 1921இல் ஆயுர்வேதமும், 1923-இல் சிரோண்மணி வகுப்புக்களும், 1939-இல் தமிழ் மற்றும் தெலுங்கு வித்துவான் துறைகளும், 1947-இல் இந்தி வித்துவான் துறையும் புகுத்தப்பட்டன. 1920-இல் கீழ்த்திசைக் கல்லூரியாக உயர்ந்த இந்த நிலையம் 1939-இல் தி. தி. தேவஸ்தானத்தின் நேரடிப் பொறுப்பில் இயங்கியது. தற்போது 300 மாணவர்களையும், 40 ஆசிரியப் பெருமக்களையும் கொண்டுள்ள இக்கல்லூரி, 1-4-87 முதல் 4-4-87 வரை தனது நூற்றுண்டு விழாவினை வெகு விமர்சையாகக் கொண்டாடியது. இவ் நூற்றுண்டு விழாவின் துவக்க நாளன்றும், கடைசி நாளன்றும் சித்தூர் மாவட்ட கண்காணிப்பு காவலர் திரு. ராமசந்திரராஜு, திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தைச் சார்ந்த திரு. ஜி. நாகேஸ்வரராவ், திரு. ஆஞ்சநேயசர்மா, தி. தி. தே. கல்வி அலுவலர் திரு. கங்கய்யா, திரு. ராமனுத கனபாடிகள் மற்றும் திரு. ராமசுப்பசர்மா முதலிய பிரமுகர்கள் பங்கேற்று உரையாற்றினுர்கள். இவ்விழா நாட்களின் மாலை வேளைகளில் நாடகங்களும், இலக்கிய நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

## இசை விழா

திருப்பதி ஸ்ரீ தியாகராஜா விழாக் குழுவினரின் ஆதரவில் 42-வது வருடாந்திர இசை மற்றும் நாட்டிய விழா 18 4-87 முதல் 24-4-87 வரை நடைபெற்றது. இவ்வாண்டின் சிறப்பு நிகழ்ச்சியாக ஸ்ரீ தியாகராஜா மண்டபத்தில் ஸ்ரீ தியாகராஜரின் திருவுருவச் சிலை 18-4-87 திறந்து வைக்கப்பட்டது. அன்று

காலை பிரதிஷ்டை, மஹாபூர்ணு ஹுதி, மஹாகும்பாபிஷேகம் ஆகிய வற்றைத் தொடர்ந்து சங்கீத கலா நிதி டாக்டர். செம்மங்குடி ஆர். ஸ்ரீநிவாச ஐயர் தலைமையில் ஸ்ரீ தியாகராஜ பஞ்சரத்ன கீர்த்தனைகள் இடம்பெற்றகோஷ்டி கானம் ஒன்று நடைபெற்றது. பின்னர் ஸ்ரீ புரந்தரதாஸர், ஸ்ரீ தியாகராஜர், ஸ்ரீ முத்துசுவாமி தீக்ஷிதர், ஸ்ரீ சியாமா சாஸ்திரி, ஸ்ரீ ஸ்வாதி திருநாள் ஆகியோரின் திருவுருவப் படங்களை ஸ்ரீ செம்மங்குடி ஸ்ரீநிவாஸ ஐயர் அவர்கள் திறந்து வைத்தார்.

அன்று மாலை ஏற்பாடு செய்யப்பட்ட நிகழ்ச்சியில் இசை விழாவினை, மகாராஷ்ட்ர மாநிலத்தின் நகர மேம்பாட்டு உணவு மற்றும் விநியோகம், வீட்டுவசதித் துறை அமைச்சர் மாண்புமிகு டாக்டர் வி. சுப்ரமணியன் அவர்கள் திறந்து வைத்துப் பேசுகையில், கலைகளுக்கு இன, இட, மொழி வேறுபாடு இல்லையென்று கூறி, அவை எவ்வாறு நாட்டு ஒற்றுமைக்கு வித்திடுகின்றன என்று குறிப்பிட்டு, இந்திய தேசிய ஒற்றுமைக்கு மறைந்த பல பக்தி-இசைக் கலைஞர்கள் எவ்வகையில் தங்கள் படைப்புகளை நமக்கு விட்டுச் சென்றனர் என்பதை மேற்கோள்களுடன் விளக்கிப் பேசினார். சென்னை இசை அகாடமியின் தலைவர் திரு. டி. டி. வாசு அவர்கள் இவ்விழாவிற்குத் தலைமை வகித்தார்.

இவ் இசை விழாவில் திருவாளர்கள் டி. லோகநாதசர்மா, நேதுநூரி கிருஷ்ணமூர்த்தி, பி. என். சுரேஷ், திருமதி. இ. காயத்ரி, திருமதி. டி. முக்தா, மற்றும் நிர்மலா சுந்தரராஜன், திருமதி. எம். எல். வசந்தகுமாரி ஆகியோரின் இன்னிசைக் கச்சேரிகளும், குமாரி. சுஜாதா ஸ்ரீநிவாசனின் நாட்டிய நிகழ்ச்சியும், டாக்டர். ஆர். கிருஷ்ணமூர்த்தியின் தியாகராஜர் சம்பந்தமான சொற்பொழிவுகளும் இடம் பெற்றன.

19-4-87 அன்று ஸ்ரீ தியாகராஜா இசை விழா குழுவின் சார்பில், 'சங்கீத சூடாமணி திரு. நேதுநூரி கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு, சென்னை தொலைக்காட்சி நிலைய இயக்குநர் திருமதி. அகிலா சிவராமன் அவர்கள் "ஸப்தகிரி சங்கீத வித்வன் மணி" எனும் பட்டம் சூட்டிக் கௌரவித்தார்.

## மற்றைய செய்திகள :

திருப்பதியில் ரூ. 2 கோடி செலவில் நவீன வசதிகளுடன் கூடிய பெரிய மருத்துவமனை ஒன்று கட்டப்படும். திருப்பதி அரசு ரூயா மருத்துவமனையின் இருதய சிகிச்சை பிரிவிற்காக ரூ. 7 இலட்சம் வழங்கப்படும்.

## திருமலையில் குடியரசுத் தலைவர்

இந்தியக் குடியரசுத் தலைவர் மாண்புமிகு திரு. ஜெயல் சிங் அவர்கள் தன் குடும்பத்தாருடன் திருமலைக்கு 6-4-87 அன்று வருகை புரிந்தார். அன்று காலை கோயில் முகத் துவாரத்தில், தி. தி. தே. மேலாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா அவர்களால் ஜனாதிபதி அவர்களுக்கு சேஷவஸ்த்ரம் போர்த்தப்பட்டு, கோயில் மரியாதை வழங்கப்பட்டது. அன்று மதியம் திருப்பதி திருச்சானூர் சாலையிலே தி. தி. தேவஸ்தானத்தாரால் ரூ. 1 கோடி செல புதியதாகக் கட்டப்பட்ட ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி கல்லூரி கட்டிடத்தைத் திறந்து வைத்தார்.

### திருப்பதி-திருமலை 18ஆம் ஆண்டு படிவிழா :

திருப்பதி - திருமலை 18ஆம் படி விழா திருப்பதியில் வெகு சிறப்பாக 14-4-87 அன்று நடைபெற்றது. முதல் நாள் மாலை 5 மணிக்கு 2வது சத்திரத்திலிருந்து பஜனைக் குழுவினர்கள் பாடிக் கொண்டே நகர் வலமாய் வந்து அன்னமாச்சார்யா கலா மந்திரத்தை அடைந்தார்கள். அங்கு, மாலை 6-30 மணிக்கு திருப்பதி தேவஸ்தான நிர்வாக போர்டு மெம்பர் இராமகிருஷ்ண ராஜு அவர்கள், தேவஸ்தான இந்து தர்ம ரக்ஷண சமஸ்தாவின் காரியதரிசி லக்ஷ்மணய்யா எம்.ஏ., திருமலை டி. எஸ். அனந்த நாராயண அடிகளார் ஆகியோர் கலந்து கொண்டு படிவிழாவின் பெருமைகளைப் பற்றி பேசினார்கள். படிவிழா சங்கப் பொதுக்காரிய தரிசி ஆற்காடு ஆ. செ. நரசிம்மன் அனைவரையும் வரவேற்றுப் பேசினார். இறுதியில் பொருளாளர் வி. ஏ. புண்ணிய கோட்டி நன்றி கூறினார்.

மறுநாள் காலை 6 மணிக்குத் திருப்பதிமலை அடி வாரத்திலுள்ள அலிபிரியில் படிவிழா நிகழ்ச்சிகள் தொடங்கப் பெற்றன. விளாப்பாக்கம் சம்பத்து, ஜெயபால், மின்னல் நரசிம்மன், ஆறுமுகம் குழுவினர் நாதஸ்வரம் வாசித்தார்கள். படிவிழா முனி. ஆற்காடு ஆ. செ. நரசிம்மன் வரவேற்புரை நிகழ்த்தினார்.

திருப்பதி தேவஸ்தான இணை நிர்வாக அதிகாரி சக்ரதாரராவ் ஐ. ஏ. எஸ். முதல் படிக்கு கற்பூரம் ஏற்றித் தேங்காய் உடைத்துப் படி விழாவைத் துவக்கி வைத்து அவரும் சிறிது தூரம் நடந்து வந்தார். துணை நிர்வாக அதிகாரி முனி சேலம் பி. ராமகிருஷ்ணன் மற்றும் பலர் பேசினார்கள்.

பெண்கள் ஒவ்வொரு படிக்கும் மஞ்சள் குங்குமம் வைத்து முன் செல்ல டி. எஸ். அனந்த நாராயண அடிகளார் தலைமையில் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் வந்திருந்த 108 பஜனைக் குழுவினர்களும், 5000 பக்தர்களும் பக்தி பாடல்களைப் பாடிக் கொண்டும் ஆடிக்கொண்டும், "கோவிந்தா, கோவிந்தா" என்று கூறிக்கொண்டும் ஏழுமலையேறிச் சென்ற காட்சி மெய்சிலிர்க்க வைத்தது. மலையேறிச் சென்று ஏழுமலையானைத் தரிசித்தார்கள். மாலையில் நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் நாதஸ்வரத்துடன் ஸ்ரீ நிவாஸர், கிருஷ்ணர், ராமர் உற்சவ விக்ரகங்கள் மாடவீதியில் திருவீதி திருவுலா வந்தன. பஜனைக் குழுவினர்கள் தொடர்ந்து பாடிக்கொண்டே வந்தார்கள். சதஸ் மண்டபத்தில் பக்தி நிகழ்ச்சிகள் நடைபெற்றன. தி.தி.தே. இணை நிர்வாக அதிகாரி சக்ரதாரராவ் அவர்களும் தி. தி. தே. நிர்வாக போர்டுமெம்பர் ராமகிருஷ்ண ராஜு அவர்களும் உடனிருந்து பஜனைக் குழுவினர்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்தார்கள். கோயம்புத்தூரிலிருந்தும், கள்ளக்குறிச்சியிலிருந்தும் பஜனைக் குழுவினர்கள் பாதயாத்திரையாகவே பஜனை செய்து கொண்டு வந்து திருப்பதி படி விழாவில் கலந்து கொண்டது குறிப்பிடத்தக்கது.

அனுப்பியவர் :

திரு. ஆ. செ. நரசிம்மன்—ஆற்காடு.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

Regd. No. H/TRP/12

வருடச் சந்தா ரூ. 12



திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



குதுமபராலஸௌ ஸ்ப்படிகவேதிசயெவ விடபேவ
அமரதரோ: பரம் பரிஹஸத் ப்ருது ரங்கபுஜ:
ஹுமணிமுத்ரிகா கநககங்கண தோர்வலயை :
இலலயி தோர்த்வயம் ப்பணிநி நிர்ப்பரஸுப்தமிம :

**ஸ்ரீபராசரபட்டர்.**

*(அனேகங்களான ரத்னமோதிரங்களென்ன பொன்மயமான கைவளைகளென்ன தோள்வளைகளென்ன (ஆகிய இவற்றாலே) பல்லவங்களையுடையதாயும், திருவனந்தாழ்வான்மீது நிர்விசாரமாகக் கண்வளர்ந்தருள்வதும், (இப்படியிருப்பதனாலே) புஷ்பங்கள் நிறைந்திருப்பதனால் தழைந்தவைகளாய் ஸ்படிகக்கல் மயமான திண்ணையிலே படுத்திருப்பவைகளான கல்பவ்ருக்ஷத்தின் இரண்டு கிளைகளை மிகவும் பரிஹஸிப்பதும் பருத்ததுமான பெரிய பெருமாளுடைய புஜத்வயத்தை ஆச்ரயிக்கிறோம்.)*